உ

முருகன் துணை

# திருப்போரூர்த்
# தலபுராண சரித்திரச் சுருக்கம்,
# ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்
# பரம்பரைச் சுருக்கம் முதலியன.

இயற்றியவர் :

புரசை: அஷ்டாவதானம்

சபாபதி முதலியார் அவர்கள்.

(இரண்டாம் பதிப்பு)

வெளியிட்டவர் :

திரு. சிதம்பர ஷண்முக சுவாமிகள்

(பன்னிரண்டாம் பட்டம்)

ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் ஆதீனம்,

திருப்போரூர்.

விலை அணா 12.

உ

முருகன் துணை

# முன்னுரை

திருப்போரூர்த் தலபுராண சரித்திரச் சுருக்கம், திருப்போரூர் வெண்பா, திருப்போரூர் ஸ்ரீகந்தர் சிந்து, திருப்போரூர் ஆண்டவர் கீர்த்தனங்கள், திருப்போரூர் ஆதீனம் சிதம்பர சுவாமிகள் பதிற்றுப் பத்தந்தாதியும் பரம்பரைச் சுருக்கமும் என்னும் நூல்கள் இப்புத்தகத்துள் அடங்கியுள்ளன. இவை, திருப்போரூர் தேவஸ்தான தரும கர்த்தரும், ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் ஆதீனத்தில் ஒன்பதாம் பட்டத்தை வகித்தவருமாகிய ஸ்ரீ முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் அனுமதியில், வித்வான் - காஞ்சிபுரம்: சபாபதி முதலியாரவர்கள் மாணாக்கர் புரசை - அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்களால் இயற்றப்பட்டு, கலியாண்டு ௪௯௭௯-ல் நிகழ்ந்த பவ ௵ கும்ப மீத்திலே முதன் முதலாக அச்சிடப்பெற்றுள்ளன. இப்பிரதி ஸ்ரீ சிதம்பர சுவாமிகளுடைய மடாலயத்திலும் பிற அன்பர்களிடத்திலும் ஒன்றுகூடக் காணப்பெறாதிருந்தது. இதுபோது, செங்கல்பட்டு டிஸ்ட்ரிக்ட் கோர்ட் ஆர்பிட்ரேட்டர் ஆபீஸில் 1900-௵த்து O. S. No. 15-ல் 94-ஆம் நம்பர் எக்ஸிபிட்டாகப் பதிவு செய்யப்பட்டுக் கோர்ட்டு முத்திரையும் போடப்பட்டுள்ள ஒரு பிரதி கோயிலுக்கு வந்த ஒருவரிடத்தே தற்செயலாய்க் காணக் கிடைத்தமையின், அது கொண்டு இவ்விரண்டாம் பதிப்பு அச்சிடப்பெற்றது.

இதற்குப் பொருளுதவி புரிந்த சென்னை, நியோ ராஜராஜேஸ்வரி லஞ்ச்ஹோம் சொந்தக்காரர், ம-௱-௱-ஸ்ரீ V. S. கங்காராம் நாயுடு அவர்கட்கு எமது நன்றியறிதல் உரியதாகும்.

சருவேசுரனாகிய சாக்ஷாது சுப்பிரமணிய பரமான்மாவை உபாசிக்கும் அன்பர்கள் இதனைப் பெற்றுப் பயனடைவார்களாக.

இங்ஙனம்:

திருப்போரூர்,
29—4—34

திரு - சிதம்பர ஷண்முக சுவாமிகள்.
ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் ஆதீனம்,
திருப்போரூர்.

# பொருளடக்கம்

கிடைக்குமிடம்:

1. ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் மடாலயம்,

திருப்போரூர்.

2. திருவாளர் - V. S. கங்காராம் நாயுடு அவர்கள்,

நியோ ராஜராஜேஸ்வரி லஞ்ச் ஹோம்,

யானை கெவுனி,

ஒற்றைவாடை, சென்னை.

முருகன் துணை

# திருப்போரூர்த் தலபுராண சரித்திரச் சுருக்கம்



பூர்வம் நைமிசாரணியத்தில் காசிபர், கௌதமர், கர்க்கர், வசிஷ்டர், வாமதேவர், புலத்தியர், விசுவாமித்திரர், பராசர் முதலிய அநேக ருஷிகள் பிரமநிஷ்டா பரராயும், விபூதி ருத்திராக்ஷம் தரித்த அங்கங்களை யுடையவராயும், ஜிதேந்திரியராயும், சிவ பூஜா துரந்தரராயும் ஓரிடத்திற் சேர்ந்து தமக்குள் பேசத் தொடங்கினர்.

ஜனன மரணமான சமுத்திரம் அஞ்ஞானமாகிய ஜலத்தால் நிறைந்து அவாவாகிய அலைகளையுடைத்தாய், காமாதிகளாகிய முதலைகளால் சஞ்சரிக்கப்பட்டு மனோ பாவங்களாகிய மச்சங்களுக்கிடமாய், தாபத்திரயமாகிய சேறுகளுள்ளேபற்றி மோகமென்னும் பாசியால் மறைவுற்று மாதர்களென்னும் அட்டைகள் மிக்கதாய், அகங்காரமென்னும் குன்றுகளால் மேடு பள்ளங்களுள்ளதாய், பழைய வாசனையாகிய புதல்களோடு கூடியதாய், அபிமான மென்னும் நீர்ச்சுழியால் அங்கங்கும் நெருக்க முற்று ஆசையென்னும் முத்துச் சிப்பிகளால் நிரம்பி பொய்யாகிய நுரைகளைக் கொழித்து ராகமென்கிற நீரோட்டத்துடனே மாயையென்னும் ஆழத்தால் நீச்சு நிலை கொள்ளாமல் துக்கமென்னும் தவளைகளாற் கோஷிக்கப்பட்டுத் துவேஷங்களென்னும் ஊற்றுக்களாலதிகரித்து உலோபமாகிய அளவில்லாதவிசாலத்தை யுடைத்தாய், அசுத்த கருமங்களாகிய பயங்கர ஜலஜெந்துக்களால் பயமுறுத்திக் காயக்கிலேசமென்னும் பிலங்களும் வளைகளும் அங்கங்கும் பொருந்தியதாய், வியாதியாகிய பிரவாகங்களால் அடிக்கடி நிரம்பி அசத்தாகிய கரையை யுடைத்தாயிருக்கின்றது.

அன்றியும், அது மகோததியைப் பார்க்கிலும் மிகப் பெரிதாயிருப்பதால், அதனைக் கடத்தற்குத் தகுதியாயிருக்கின்ற மரக்கலம் யாதெனில், ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளது பாதமேயன்றிப் பிறிதில்லையென்று அக்கடவுளின் சாக்ஷாத்காரத்தை அடைதற்கு அநுகூலமாகிய உத்தியை அவ்விமலராகிய மாதவர்கள் யோசிக்கலுற்றனர்.

பரத்துவாசர் சத்தியமென்னும் உபாயத்தால் அடையலாமென்றும், வசிஷ்டர் தபோபலத்தால் அது கிடைக்குமென்றும், சதான்மர் தருமத்தால் கிடைக்குமென்றும், காசிபர் யாகங்களால் கிடைக்குமென்றும், கண்ணுவர் தானங்களாற் பெறலாமென்றும், கௌதமர் புத்திரரால் அகப்படுமென்றும், துருவாசர் துறவால் சித்தியாகுமென்றும் இவ்வாறு அவ் விருடிகள் பற்பல விதமாக யோசித்துக் கொண்டிருக்கையில், வியாச ருஷிக்கு முக்கிய மாணுக்கராகிய சூத புராணிகர் முனிவர்களது புண்யாதிகத்திளுல் அவ்வனத்தில் வந்தனர்.

அம்முனிவர் அவரை நோக்கி அர்க்கிய பாத்திய முதலியவற்ருற் பூசித்து ஆசனத்தி விருத்தினர். அவர் சூத புராணிகரைத் தோத்திரஞ் செய்து, தமது உள்ளக்கொள்கையை அவரிடத்தில் விண்ணப்பஞ் செய்து, தாம் பேசிக்கொண்டிருந்த பலவித யுத்திகளையும் விவரமாகச் சொல்லிப் பிரார்த்தித்தனர். சூத புராணிகர் முனிவரரை நோக்கி, "பதினெண் புராணங்களையும் வெளியிட்டவராகிய வியாசரால் பூர்வத்தில் சமஸ்த வேதாகமங்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்ற இந்தப்பொருளெனக்குக் கிடைத்தது. இது காந்த புராணத்தில் சங்கரசங்கிதையில் சிவரகசிய கண்டத்தில் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளால் வள்ளியம்மைபொருட்டு விவரித்துச் சொல்லப்பட்டுள்ளதா யிருக்கின்றது. அதனை நான் கேள்வியுற்றபடி சொல்வேனுக. நீவிர் பரம பக்தியோடு கேட்கத்தக்க"தென்று சொல்லி வருகின்றனர்:

"ஊழிக்காலங்கள் தோறும் வளர்ந்தோங்குகின்ற ஸ்ரீ கைலாசத்தின் கொடுமுடி நடுவில், சகலவித அலங்காரங்களால் நிறைவுள்ள திருக்கோயிலுள், நவரத்தினங்களழுத்திய சிங்காதனத்தில், ஸ்ரீ பார்வதி சமேதராய் விநாயகர் முருகக் கடவுள் சூழ்ந்திருக்கப் பரமேசுவரர் வீற்றிருந்து, பிரம விஷ்ணுக்களும், ஜனகர் முதலிய முனிவரரும், அநந்த முத்தர்களும், நந்தி தேவர் முதலிய கணங்களும், அளவற்ற உருத்திரர்களும், மற்றை யெல்லாத் தேவர்களும் வந்து நெருங்கிப் பயபத்தியுடன் சேவிக்க, அவரவர்களுக்கும் இச்சித்தவரங்களை அநுக்கிரகித்து வருகின்ற சமயத்தில், அநேக ருஷிகளுடன் அகஸ்திய முனிவர் பக்தியினுற் பலமுறை நமஸ்கரித்துக்கொண்டு, அதி விநயத்துடன் மெள்ள மெள்ள நெருங்கிச் சந்நிதானத்தில் வந்து, அநேக முறை அஷ்டாங்கமாக ஸ்ரீபாதங்களை வணங்கி, வேத வாக்கியங்களால் தோத்திரம் பண்ணினர். அதனைக் கேட்டுத் திருவுளமகிழ்ந்தருளிய பரமேசுவரர் அவரைக் கடாஷித்து, "யாதுவேண்டி வந்தனை?" யென

வினவ, அகத்தியர் இறைவரைப் பணிந்து விண்ணப்பஞ் செய்கின்றனர்: "ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியமென்னும் ஆறும், பகமென்னும் சப்தத்தால் சொல்லப்பட்டுள்ளன. அவற்றின் உண்மையை அடியேனுக்குத் தெளிவாக விளக்கியருள வேண்டு" மென்ன, பரமேசுரர், "முனிவனே! நீ வினவியது மோக்ஷ சாதனமாயுள்ளது; உன்னால் அறிந்து கொள்ளத்தக்கதுதான். இயற்கையாகவே அதனை உணர்ந்துள்ள ஸ்ரீ சண்முகமூர்த்தி, முன்னம் ஒரு காலத்து நம் பொருட்டுச்சொல்லி யிருக்கின்றனர். அது பிரணவப் பொருளதாதலால் நமக்கு ஆநந்தத்தை யுண்டாக்கியது. ஆதலால், ஸ்கந்தரை யடைந்து அதனைக் கேட்டுக் கொள்ளக் கடவை"யென்று கட்டளையிட, அவ்வாறே அகஸ்தியர் புறவிடை கொண்டு, சகல விருக்ஷங்களாலும் பல அருவிகளாலும் நிறைந்து அலங்காரமாயிருக்கின்ற அநந்த நவரத்தின மண்டபங்களாற் சூழ்ந்துள்ளதாகிய ஸ்ரீகந்த கிரியில் சகல தேவர்களும் வணங்க, வீரவாகு தேவர் முதலியோர் புறங்காத்துப் பணி கேட்க, சத்திகளிருவருடன் சிம்ஹாசனத்தில் ஸ்ரீஸ்கந்தர் வீற்றிருக்கின்ற திருவோலக்கத்தைக் காணப் பெற்று, ஆனந்த பாஷ்பங்களால் நனைந்த சரீரத்தையுடையவராய், மலர்ந்த முகத்துடன் சந்நிதியிலடைந்து, பலதரமும் நமஸ்கரித்து, கைகளை அஞ்சலித்துக் கொண்டு வேதப் பொருள்களாற் றுதி செய்தனர்.

துதித்துப்பாடிய அகஸ்தியரைத் திருநோக்கஞ் செய்தருளி அவரது விண்ணப்பத்தைத் திருவுளங் கொண்டு, "நம்மைத் துதி செய்த தோத்திரம் அகஸ்திய கீதையென்று விளங்கக் கடவது; இப்போது நம்மைக் கோரி வந்து பிரார்த்தித்த ஷாட்குண்யப் பொருளைப் பலவகைச் சத்திகளுக்கும், பிரம வித்துக்களுக்கும், திருமால் முதலிய தேவர்களுக்கும், அந்தணர் முதலியோருக்கும் போகத்தையும் முத்தியையும் கிடைப்பித்து அவர்களால் வசிக்கத் தக்கதாயுள்ள நிலவுலகத்தில், குருமூர்த்தமாகி யுபதேசிக்கின்றோ" மென்றருளிச் செய்யக் கேட்டு, அகஸ்தியர் மீண்டும் வணங்கி, "உலகத்தில் அநேக க்ஷேத்திர முண்டு; அவற்றுள் எந்த க்ஷேத்திரத்தில் அதனை அடியேனுக்குக் கட்டளையிட்டருளத் திருவுளங் கொண்டது? அதனைக் கருணையால் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்" என்று நமஸ்கரிக்க, ஸ்ரீ சண்முகமூர்த்தி அருளிச் செய்கின்றனர்:

"உலகத்தில் போக மோக்ஷங்களுக்கு ஹேதுவாக அநந்த தலங்களிருக்கின்றன. அவற்றுள் பரமேசுவரருக்குப் பிரீதிகரமாயுள்ளவை பதினாறு. அவற்றுள் ஆறு தலங்கள் விசேடமானவை. அவற்றைப்

பார்க்கினும் நமக்கு ஆநந்தகரமாயும், சாநித்தியமாகியும், பாபசமூக மாகிய இருட்டுக்குத் தேஜசுகளாகியும், முத்தி யென்னும் ஸ்ரீசையோகத்திற்குப் புட்பவமலியாகியும், சர்வபாப விமோசனகரமாகியுமுள்ள தலங்கள் அறுபத்தினுன் குண்டு. அவற்றுள் ஆறுதலங்கள் நமக்குரியவை. அவை பராக்கியம், திருச்செந்தூர், சாமிசைலம், கோமுக்தம், மகாகதம்பவனம், யுத்தபுர மென்பனவாம். இவ்வாறு தலங்களுக்குள் நமக்கு மிகுந்த பிரீதிகரமாயுள்ளது யுத்தபுரி யென்னும் திருப்போரூர். அது நாம் இடைவிடாமல் வசிக்கின்ற ஸ்தலமாகிப் பாபமென்னுங் காட்டுக்கு அக்கினியாகியும், சோகமாகிய விருட்டுக்குச் சூரிய மண்டிலமாகியும், ஜனன மரணமாகிய விஷப்பூண்டுகளுக்குக் கோடாலியாகியும், முத்தி யென்னும் பெண்ணின் விவாகத்திற்கு மங்கள கிருகமாகியும், சகல தேவர்களுக்கும் ஆஸ்பத ஸ்தானமாகியும், ருஷி சங்கத்தினுல் உபாசிக்கப்பட்டதாகியு முள்ளது. அது அத்தியந்தம் புண்ணிய க்ஷேத்திரமாகவு மிருக்கின்றது. அந்த க்ஷேத்திரத்தில் சகல தேவர்களும் பூசிக்கின்ற யுத்தபர்வதமென்றெரு மலையுண்டு. அதன் கொடுமுடியில் பூர்வ காலத்தில் நாம் பரார்த்தமாகப் பிரதிஷ்டை பண்ணிய பரமேசுவரர் பார்வதி சமேதராய் விக்நேசுவரருடன் வீற்றிருந்து, பக்த ஜனங்களுக்குச் சதுர்வித புருஷார்த்த பலன்களையும் பெறுவித்து, மனதார ஸ்மரிக்கின்றவர்களுக்குச் சகல பாவங்களையும் பரிகரித்து, இடைவிடாமல் சாநித்தியராயிருக்கின்றனர். அந்தப் பர்வதத்தின் கிழக்கில், அன்பர்களுக்கு எண்ணியவாறு பலன்களைக் கொடுத்துக்கொண்டு, விஷ்ணு புத்திரியாகிய வள்ளியம்மையும், இந்திரன் புத்திரியாகிய தெய்வயானையாரும், இருபக்கத்தினுமிருக்க நாமெக்காலமும் நீங்காமல் வீற்றிருக்கின்றோம். அதற்குத் தக்ஷிணபாகத்தில், மூழ்கினவர்களுக்குப் பிரமகத்தி முதலிய கொடிய பாவங்களையும் நசிக்கப் பண்ணுகின்றதாயுள்ளது ஒரு தடாகம். அது வள்ளையாரோடை யென்றும், சரவணப் பொய்கை யென்றும் பெயருள்ளது. அது தீர்த்த விசேஷத்திற் சிறந்திருக்கின்றது. அதற்கு வடதிசையில், நிம்ப விருக்ஷத்தின் மூலத்தில் விக்நேசுவரர் வீற்றிருந்து, தம்மை வந்து தரிசிப்பவர்களுக்கு விக்நங்களை யொழித்து அபீஷ்டங்களைப் பாலிக்கின்றனர். இவ்வகை மகாத்மியமுள்ள யுத்த புரியில் நாம் பிரணவப் பொருளை உபதேசித்தருளுவோம். எந்தத் தலத்தில் தேவர்களும் முனிவர்களும் சித்தர் முதலியோரும் மாசற்ற மனதுடனே நம்மைப் பக்தி பூருவகமாகப் பூசித்து இஷ்ட பலன்களை அடைகின்றனரோ அத்தலமாகிய

திருப்போரூரின்கண், அகஸ்திய முனியே! போய்த் தியானித்துக் கொண்டிருந்தால் உனது அபீஷ்டம் நிச்சயமாகக் கூடிய விரைவிற் சித்தியாகுமென்று பிரசாதித்தருளினர்."

இவ்வாறு சொல்லக் கேட்ட நைமிசாரணிய முனிவர்கள், யுத்த புரி க்ஷேத்திரத்தின் எல்லேயும், அதிலுள்ள சிவ தலங்களும், விஷ்ணு தலங்களும், விநாயகர் தலங்களும் இன்ன தின்னதென்று சொல்ல வேண்டுமென வினவச் சூத புராணிகர் சொல்லுகின்றனர் :

"ஸ்ரீ காஞ்சிபுரத்திற்குக் கிழக்கில் ஐந்து யோசனைக்குள்ளும், திருக்கழுக் குன்றத்திற்கு ஈசான திக்கிற் பத்து நாழிகை வழிக்குள்ளும், கிழக்குச் சமுத்திரத்திற்கு மேற்கில் இரண்டு நாழிகை வழிக்குள்ளும், திருமயிலையைச் சார்ந்த திருவான்மியூர்க்கு இருபது நாழிகை வழிக்குள்ளும் அத்தல மிருக்கின்றது. இங்ஙனம் நான்கு திக்கிலுமுள்ள எல்லேயினளவு ஒன்றரைக்காவதமாம். அத்தலத்தில் ஆன்மாக்களுக்குக் கலியுகாவத்தையும், இயமவேதனையு முண்டாவதில்லே. ஸ்ரீ சண்முக மூர்த்தியின் சத்திமுனையாற் பெருமையுற்று, அவரது தேஜசினல் நிறைந்துள்ளது. அங்கு வசிப்பவர்கட்கு முத்தி எளிதினடையக் கூடும். பக்தியாலாவது அபக்தியாலாவது அங்கு வசிப்பவன் சர்வ பாவத்தினின்று நீங்கித் தேகாந்தத்திற் கந்த கைலாசத்தையடைவன். அத்தலத்திலுள்ள யுத்தகிரியை ஒருமுறை வலம் வந்தவன் மற்றைப் புண்ணிய தலங்களில் வாசஞ்செய்தவனுகிச் சகல இஷ்ட காமியங்களேயும் பெறுவன். அதன் கொடுமுடியிற் சுயம்புவாய் வீற்றிருக்கின்ற ஸ்ரீ பாலாம்பிகை சமேத மகேசுவரரை ஒருமுறை பக்தியுடன் பிரதக்ஷிணம் பண்ணினவன் பந்த விமோசனம் பெறுவன். அம் மலே திருமகள் பூஜித்தமையால் ஸ்ரீ பர்வத மென்றும், சண்முக மூர்த்தியால் அங்குச் சில அசுரர் தாக்கப்பட்டுப் போய்விட்டமையால் யுத்தகிரி யென்றும் பெயர்பெற்றது.

அவற்றின் வரலாறு, பூர்வம் ராதாந்தர கற்பத்தில், ஸ்ரீவைகுண்டத்தின்கண், விஷ்ணுதேவர் ஒருநாள் மஹாமணி மேடைமேற் பரிவாரங்களின்றி உபேந்திரனுடன் ஸ்ரீதேவி சமேதராய் வீற்றிருந்து சிலரகசிய வார்த்தையாடிக் கொண்டிருந்த சமயத்தில், அங்கு வந்த கண்ணுவ முனிவரைத் தமது இரகசியவார்த்தைகளாலே பரவசராக இருந்தமையால் தாம் உபசரிக்கவில்லே. அதனுற் கண்ணுவர் கோபமுற்று விஷ்ணு தேவரையும், ஸ்ரீதேவியையும், உபேந்திரனேயும் நோக்கி, "நம்மை உபசாரம் செய்யா திருந்தமையால் நீவிர் மூவரும் முறையே ஊமையாகவும், மானுகவும், வேடனுகவும் தோன்றி

வனங்களிற் சஞ்சரிக்கக் கடவீ''ரென்று சபித்துத் தமது ஆச்சிரமம் வந்து சேர்ந்தனர்.

பின்பு, மேற்கூறிய மலையைச் சார்ந்த ஆரணியத்தில் உபேந்திரன் வேடர்க்கரசனுகத் தோன்றி யிருந்தான். அவ் வனத்திற்குச் சில தூரத்திலுள்ள ஒரு மலைச்சாரலில் விஷ்ணு தேவர் சிவ முனி யென்னும் பேருடன் மாவுரியுடுத்தி விபூதி ருத்திராக்ஷதாரணராய்ப் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜெபித்துக்கொண் டொரு புன்னை மரத்தின் கீழ்த் தவத்திலிருந்தனர். திருமகளும் ஒரு பெண்மானுகித் துணை யில்லாமையால் பயமும் மருட்சியு மிகுந்து, தனது துணையாகிய பதியை யடையவேண்டுமென்னும் இச்சையுடன் வனங்கடோறும் தேடிப் பார்த்துக்கொண்டு, துணையைக் காணுமையால் அதிக கிலேசங் கொண்டு சஞ்சரித்து வருங்கால், ஒருநாள் தெய்வாதீனத்தால் மேற் கூறிய மலைச்சாரலில் வரப்பெற்று, அங்கு தவத்திலிருக்கின்ற சிவ முனியைக் கண்டு இச்சையுண்டாகி, அருகில் வந்து இடைவிடாமல் அவர் முகத்தை மோந்து மோந்து அன்புடனெதிரில் நிற்க, முனிவரும் அழகுள்ள இளமை வாய்ந்த அந்தப் பெண்மானை யிச்சையொடுங் கண்களால் நோக்கியமாத்திரத்தில், அது கர்ப்பங்கொண்டு, அங்கே ஓரோடைக்கரையில் குறத்தியர் வள்ளிக்கிழங்குகள் தோண்டிய பள்ளத்தில் ஒரு பெண்குழந்தையைப் பெற்றது; அக்குழந்தை தன்னின் நின்றும் வேறுபட்டதாய்க் குரல்பேத முள்ளதாயிருந்தும் அதனைத் தான் விட்டுப்போகத் துணியாமல், அடிக்கடி முகத்தை மோந்தும் உடம்பை நாவினுல் வருடியும் அடங்காத பிரீதியுடன் பால் சுரந்து பூரிக்கின்ற மடியையுடையதாய்க் கூவிக்கூவிச் சுற்றிச் சுற்றி ஓடியும் வந்தும் களித்திருந்தது; அன்றியும், அக்குழந்தையை எடுத்துக் கொண்டு போகமாட்டாமையாற் காட்டு மிருகங்கள் அதனை வருத்தி வதைத்திடாதபடி பாதுகாத்துக்கொண்டு, மிகுந்த அச்சத்துடனிருந்த சமயத்தில், நான்கு பக்கங்களிலும் நாய்கள் சூழப் பம்பைகளொலிக்க வார் வலை வெடிகளுடன் வேட்டைமேல் வருகின்ற ஒரு கூட்டத்தைத் தூரத்திற் பார்த்து மருண்டு பயந்து, "இனி யாது செய்யக்கடவோம்; நாம் இங்கு தாமதித்து நின்ருல் வேடர் வந்து நம்மைப்பற்றி வதைப்பர்; குழந்தைக்கு வேருேர் துணையுமில்லை; எவ்வாருனும் நாம் இதுபோது இவ்விடத்தைவிட்டு நீங்குவதே நலன்; எல்லா வுயிர்களுக்கும் பதியாகிய கடவுளே இக்குழந்தைக்குப் பிரியாத் துணையாகு" மென்றுட்கொண்டு மேல் நடக்க விருக்கின்ற நிமித்தத்தால் தன் குழந்தையை விட்டுப் போகத்துணிந்தது.

அத் தருணத்தில் வேட்டைமேல் வந்த உபேந்திர வேடராஜன் அக்குழந்தையைக் கண்டு பூரித்து, கையினால் தழுவி ஏந்திக்கொண்டு போய்த் தனது பத்தினி கையிற் கொடுக்க, அவள் அதனைப் பார்த்து மகிழ்ந்து, இருகையாலும் வாங்கிப் பால் சுரந்து அதற்கு ஊட்டிச் சீராட்டி வளர்க்க, வள்ளியம்மை யென்னும் பெயருடன் அது வளர்ந்திருந்தது.

பின்பு, ஸ்ரீதேவியாகிய மான் வனங்கடோறும் சஞ்சரித்து வருங்கால் சாபவிமோசனகாலம் நேர்ந்தமையால், திருப்போரூரின்கணுள்ள யுத்தகிரியை யடைந்து, நாற்றிசையினுஞ் சுற்றிப் புல்மேய வேண்டுமென்னுமிச்சையால் மூன்றுதினம் வலமாகத் திரிந்து கொண்டிருக்க, அம்மலையின் தெய்வத்தன்மையால் மான் வடிவு நீங்கிச் சுயரூபத்தைப் பெற்றவளவில், ஸ்ரீ தேவிக்கு அதிசயமும் அன்புந் தோன்றி இக்கிரியில் ஏதோ தெய்வத்தன்மை நிலைபெற்றுள்ளது; இது புண்ணிய க்ஷேத்திரமாகும்; நிச்சயந்தான்; வேறே விசாரம் வேண்டுவதில்லையென்று அத்தலத்தை நான்கு பக்கங்களினும் போய்ப் பார்த்துப் புண்ணிய தீர்த்தமாகிய வள்ளையாரோடையில் ஸ்நானஞ் செய்து, நித்திய விதிகளை முடித்து, அதன் வடகரையிற் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீசண்முக மூர்த்தியைத் தரிசித்து விடைகொண்டு, யுத்தகிரியைப் பத்தியொடு வலம் வந்து, மேலேயேறிக் கொடுமுடியின்கண் சிவலிங்கப்பெருமானைத் தரிசித்து, இந்த மஹாலிங்கத்தின் பிரபாவத்தினாலேயன்றோ நமக்குச் சாப விமோசனங் கிடைத்ததென்று துதித்து, கிரீசரையும், பாலாம்பிகை அம்மையையும் நின்மலமான தீர்த்தம் புஷ்பம் அக்ஷதை முதலியவற்றால் அபிடேக அலங்காரங்கள் செய்து, நாடோறும் பூசித்து, நவ நவமாகிய தோத்திரங்களால் துதிசெய்து பிரார்த்தித்துத் தன் பதியாகிய விஷ்ணுதேவரை யடையவேண்டுமென்னுங் கருத்தால் அங்கு தவத்தை மேற்கொண்டு, ஆயிர வருடவரை நோற்றிருந்தாள்.

மேற் புன்னைமரத்தின் கீழிருந்த சிவமுனிவர், பிறகு அநேக வனங்களிற் சஞ்சரித்து யோகு செய்தும், சாப விமோசனங்கிடையாமையால் ஸ்ரீ கைலாசத்தை நோக்கிச் சென்று, அச்சாரலில் ஆயிர வருட வரையில் அருமையான தவஞ் செய்து கொண்டிருக்கக் கைலாசபதி பிரத்தியக்ஷமாகி அநுக்கிரகித்தருள்கின்றார்: "சிவமுனியே! பூமியின்கண் பிரசித்தமாயிருக்கின்ற நமது தலங்கள் அநேகங்களுள் யுத்தபுரி யென்றொரு மஹாஸ்தல முண்டு. அதிற் கண்ணுவ முனிவ னாச்சிரமத்தில் ஸ்கந்தரது ஆநந்தத்திற் கிருக்கையான

யுத்தகிரியின்கண், கந்தராற் பிரதிஷ்டை செய்த சிவலிங்க மொன்றுண்டு. அது கண்ணுவ முனிவனாலும் பூசிக்கப்பட் டுள்ளது. அம்மலையிற் கந்தரது உபாசனையை முக்கியமாகவுடைய அம்முனிவன் நாடோறும் கிரிவலஞ் செய்து கொண்டு ஆச்சிரமத்தி லிருக்கின்றனன். அங்கு உனது பாரியாகிய திருமகள் சாபவிமோசன மடைந்திருக்கின்றனளாகையால் அவ்விடத்தி லுனக்கும் சாபவிமோசனங் கிடைக்கு”மென்று சொல்லி யெழுந்தருளலும்; சிவமுனிவர் ஸ்ரீகைலையினின்றும் பூலோகத்தை யடைந்து யுத்தகிரியைச் சேர்ந்து தரிசித்த மாத்திரத்தில், ஹிருதயம் நிர்மலமாகி அதிசயங் கொண்டு, “இஃதென்ன அற்புதம் ; இவ்வுலகத்தில் அநந்த வனங்களிற்போய் நாம் தவஞ் செய்தும் இவ்வாறு மனம் நிர்மலமாகவில்லை ; இங்கே பிரவேசித்த மாத்திரத்தில் நிர்மலமாயிற்று ; இது மஹா ஆச்சரியமென எண்ணி, ஸ்ரீகைலாசத்திற் பரமசிவனால் சொல்லி யருளிய புண்ணிய தலம் இதுவேயாம்; அதோ எதிரிற் காணப்படுவது கண்ணுவ ராச்சிரமமாகும் ; அதற்கருகில் தோன்றுவதுதான் யுத்தகிரி ; அதற்குக் கீழ்ப்பாலுள்ளது கந்தராலயமாகும்” என நிச்சயித்து, ஆநந்தாகாரராய் அணுகி, அன்னப் பறவைகள் வசித்தொலிக்கின்ற தாமரை மலர் நிறைந்து, வண்டுகளது கீதங்கள் மிகுந்து, உத்தமர்களது உள்ளம் போல் மாசற்றிருக்கின்ற ஜலத்தால் நிறைவுற்று, சித்தர் முதலிய தேவர்களால் சேவிக்கப்பட்டு, பிரமகத்தி முதலிய மாபாதகங்களை நிவர்த்தி செய்து பிரம தீர்த்தமென்று பிரசித்தமாயுள்ள வள்ளையாரோடையைக் கங்காதீர்த்தமாகப் பாவித்து, சங்கற்ப மேற்கொண்டு அதில் மூழ்கி, விபூதி ருத்திராக்ஷாலங்கிருதராய் நித்திய கன்மத்தை முடித்து, ஸ்கந்தரைத் தரிசித்து, அத்தல விசேடத்தை அவர் சொல்லக்கேட்டுப் புளகாங்கித முற்றுப் பணிந்து, அவர் திருவருளை மேற்கொண்டு கிரியை வலம் வந்து, அதன் சிகரத்திலுள்ள மஹாலிங்கத்தைப் பத்தி பூர்வகமாக வணங்கிச் சங்கற்பஞ் செய்துகொண்டு, காமிக ஆகமத்திற் சொல்லிய விதிப்படி அபிடேக முதலியனவும் அன்புடன் செய்து சகல வுபசாரங்களினாற் பூசித்து, வேத வாக்கியங்களாற் பற்பல விதமாகத் தோத்திரஞ் செய்தனர்.

அப்பொழுது, விஷ்ணுதேவர் செய்த திவ்ய பூஜையினாலும் தோத்திரங்களாலும் ஆநந்தமுற்றுப் புத்திரர்களுடன் பார்வதி சமேத கைலாச நாதர் சிவலிங்கத்தினின்றும் வெளிவந்து காக்ஷி யருளி, அவரது சாப விமோசனஞ் செய்து, ஸ்ரீதேவி அதற்குமுன் அங்கு வந்து தானுஞ் சாப விமோசனம் பெற்றுத் தம்மைப் பூஜித்துத் தன்

பதியை அடையவேண்டிக் கந்தராலயத்தில் வள்ளியம்மைக்கருகில் நோற்றிருக்கின்ற செய்தியைச் சொல்லி, ஸ்ரீதேவியையும் வரவழைத்து, "உனது பூசையினாலும் கிரிப்பிரதக்ஷிணத்தினாலும் அளவில்லாத ஆநந்த முற்றோம்; உனது கோரிக்கையின்படி உனது பதியைப் பெற்றுக் கொள்க"வென்று தந்தருளி, ஸ்ரீதேவியை நோக்கி அநுக்கிரகிக்கின்றனர் :

"இந்த மலைக்கு ஈசானத்தில் கீழ்ச் சமுத்திரக்கரையில், சில முனிவர்கள் உன்னைப் புத்திரியாகப் பெறவேண்டி நெடுங்காலம் தவஞ் செய்யா நின்றனர். நீ அவர்களுக்குப் புத்திரிகளாய் அவதரிப்பாய். ஒருகாலத்திற் சதுரங்க விளையாட்டில், உனக்கும் உன்பதிக்கும் வாக்குவாதத்தினால் நீ தனித்து நீங்கி அம்முனிவர்கட்குப் புத்திரிகளாயிருக்க, இந்த விஷ்ணுதேவர் வராகரூபியாய்த் தேடிக்கொண்டு வந்து அம்முனிவ ராச்சிரமத்திலிருக்கும் உன்னை ஓராண்டு பரியந்தம் ஒவ்வொரு பெண்ணாக விவாகஞ் செய்து, நித்திய கல்யாணரென்னும் பெயருடையரா யிருப்பர். அன்றியும், விஷ்ணுதேவர் உன்னைத் தமது மடியிலேந்திக்கொண்டு ஒருபோதுங் கீழே விடாமலிருப்பாராகையால் அந்த க்ஷேத்திரம் வாமகேவி யென்னும் நாமத்தையுடையதாகும்.

இன்னும் கேட்பாயாக: உனக்குப் பிரீதிகரமாயிருக்கின்ற சுக்கிரவாரம் விடியற்காலத்திலெழுந்திருந்து, ஸ்நான முதலிய நித்திய கன்மங்களைப் பிரணவாமிர்த தீர்த்தத்தினால் நிறைவேற்றி, நம்மாலும் கௌரியினாலும் நமது குமாரர்களாலும் ஆசரிக்கப்பட்டிருக்கின்ற இவ்வோங்கார ரூபியாகிய ஸ்ரீசைலத்தை, யாவன் பத்திமையோடும் பிரதக்ஷிணஞ் செய்கின்றானோ அவன் எழு பிறவியாகிய துன்பங்களினின்றும் விடுபட்டவனும். இக்கிரியை முக்காலும் வலம் வருபவன் பாப ரஹிதனாய் ஆயிரம் அசுவமேதஞ் செய்த பயனையடைந்து, செல்வமிகுந்து, அபீஷ்டங்களைப் பெற்றுச் சந்தான விருத்தியுடன் வாழ்ந்திருந்து, தேகாந்தத்தில் நமது பதவியையும் அடைவன். வருடந்தோறும் ஆடிமாதக் கார்த்திகையில் நியமத்துடன் தேவ முனிவ யக்ஷ கந்தருவர் முதலியோரும் தத்தம் பத்தினிகளுடன் இங்கு தரிசனத்தின் பொருட்டு வருகின்றனராகையால், அவர்களுடன் நீங்களிருவீரும் கூடிவந்து சோமாஸ்கந்தராகிய நம்மைப் பக்தியினா லாராதித்துச் சேவித்து ஆநந்தத்தை யடையக் கடவீ"ரென்று சொல்லியருளினர்.

இவற்றைக் கேள்வியுற்று, " இக்கிரியானது பிரணவாத்மாவென்றும், இத்தீர்த்தம் பிரணவாமிர்தமென்றும் யாது காரணத்தாற்

பெயர் பெற்றன? அவ்வரலாற்றைச் சொல்லியருள வேண்டு"மென்று விஷ்ணுதேவர் அஞ்சலித்து வினவுதலும், ஸ்ரீகைலாசநாதர் திருவாய்மலர்ந் தருள்கின்றனர் :

"ஒரு கற்பாந்தரத்தில், வேதங்கள் கலிகாலத்தை அஞ்சி அருந்தவஞ்செய்து நம்மைப் பிரார்த்திக்க, அவைக்கு நாம் காட்சி கொடுத்தருளி அவற்றின் வேண்டுகோளின்படி வரந் தரப்பெற்ற வேதங்கள், ஸ்ரீகாஞ்சீபுரத்திற்குக் கிழக்கே ஒருசார் அக்கினி மூலையிற் கிழக்குச் சமுத்திரத்திற்கு மேற்பால் காதவழி தூரத்தில் உருத்திரகோடி என்கிற திவ்ய க்ஷேத்திரத்தில் பர்வதமாகி நின்றன. அது வேதகிரி என்று பெயராயினது. அந்த மலையின் சிகரத்தே லோகாநுக்கிரகத்தின் பொருட்டு நாம் திவ்ய லிங்காகாரமாகிச் சாநித்யமாக இருக்கின்றோம். அவ்வாறு வேதங்கள் வரம்பெற்றதை யறிந்து வேதங்களுக்கு ஆதியந்தமா யிருக்கின்ற பிரணவ புருஷன் நம்மை யடைந்து நமஸ்கரித்துக் கேட்டுக்கொண்டவாறு :

"ஸ்ரீ கைலாசபதியே! அடியேன் தேவரீர் கிருபையினால் வேதங்களுக்கெல்லாம் ஆதியந்தமாகி, மஹா மந்திரங்களுக்கெல்லாம் முதலாகி யிருக்கின்றேன். என்னை வேதங்கள் நீக்கிவிட்டுத் தனியே சென்று தவஞ் செய்து வரம் பெற்றமையால் அடியேனுக்கு இருக்குமிடம் யாது?" என விண்ணப்பஞ் செய்ய, "பிரணவமே! தமது சரீரமாக உன்னை வகித்திருக்கின்ற நமது சுப்பிரமணிய மூர்த்தியை நோக்கிப் பிரார்த்தித்தனையாயின் உனது மனோரதம் நிறைவேறு"மென்று கட்டளையிட்டருளலும், பிரணவம் முருகக்கடவுளை யடைந்து வணங்கிப் பலவாறு தோத்திரஞ் செய்தது. பிள்ளையார் ஓங்காரத்தைக் கடைக்கணித்து, அதன் விண்ணப்பத்தைக் கேட்டருளி அநுக்கிரகித்த வண்ணம், கைலையை நீங்கி யித்தலத்தின்கண் வந்து, வள்ளையார் ஓடையி னீராடி அநுஷ்டானங்களை முடித்து, ஸ்கந்தரை நமஸ்கரித்து அவரைப் பூசிக்கவேண்டிக் கோயிலின் ஈசானத்தில் பிரணவாமிர்தமெனத் தன் பேரால் ஒரு தீர்த்தத்தை யுண்டுபண்ணி, அதனாற் பிள்ளையாரை அபிஷேகித்துத் தோத்திரஞ்செய்து அன்புடன் பிரார்த்தித்த அளவில், ஐசுவரிய முதலிய ஆறும் பூரணராயிருக்கின்ற ஷண்முகர் அங்குள்ள சுயம்புவாகிய விம்பத்தினின்றும் பிரத்தியக்ஷராய் வந்து, தமது பாதங்களில் நமஸ்கரித்த பிரணவ புருஷனைக் கைகளாலெடுத் தாசிர்வதித்து, "மஹா மந்திர யந்திரங்களில் உன்னையெப்படிச் சூழப்பட்டிருக்கின்றோமோ அப்படி இந்த யுத்தபுரியில், நீ நமது பின்பக்கத்திற் சூழ்ந்து மலைவடிவமாகி யிருக்கக் கடவாய் ;

இது முதல் பிரணவ சைலமென்று பெயர் பெறுவாய்; உன துச்சியில் உன்பாலுள்ள பிரீதியினால் கௌரீ பாகராகிய கைலாச நாதரும் நாமும் இடைவிடாமல் வீற்றிருந்து உன்னைச் சேவிக்கின்ற ஆத்ம கோடிகளுக்கு மனோரதங்களைப் பூர்த்தி செய்வோம்; ருத்திர கோடியில் பர்வத ரூபங்களாய் நிற்கின்ற வேதங்கள் உபநிஷத கணங் களோடு நாடோறும் உன்னைச் சேவித்துக்கொண் டிருக்கக்கடவது; உன்னருகிலிருப்பவர் உன்னை முன்னர் வணங்கி வேதசைலத்தைப் பின்னர் ஒரு முறை தரிசிக்கப்பெறுவராயின் அவர்கட் கினிவரும் பிற வித் துன்பங்களை யொழித்துக் கடாக்ஷிப்போம்; அவ்வாறே வேத கிரிக்கருகிலிருந்து முதலிலுன்னைச் சேவித்துப் பிறகு வேதகிரியைச் சேவித்தவர்க்குச் சிவபெருமான் போகமுக்திகளை அருளிச் செய்வர்; வருடந்தோறும் ஆடிமாதக் கார்த்திகையில் தேவர் முனிவர் முத லானவர்கள் சூழக் கிரிரூபமாயிருக்கின்ற உன் சிரசில் விநாயகருடன் பார்வதி பாகராகிய மகேசுவரரைப் பரார்த்தமாக நாம் பூசிப்போம்; அத்திருநாளில் உன்னா லுண்டுபண்ணப்பட் டிருக்கின்ற பிரணவ தீர்த் தத்தில் மூழ்கிப் பத்தியுடன் வலம் வந்தவனுக்கு மறு பிறவி யுண் டாகமாட்டா"தென்று பிரணவகிரி, பிரணவ தீர்த்தங்களின் விசேடங் களையும், விதீபாதம், கந்த சஷ்டி, கார்த்திகை, அமாவாசை, மாதப் பிரவேசம், சுக்கிரவாரம் இவை முதலிய தினங்களில் இங்கிருந்து முறைப்படி விரதம் நோற்பார்க்குக் கிடைக்கும் பலவகைப் பயன்களை யும் எடுத்தோதி விடை கொடுக்கப் பிரணவமும் அவ்வாறே இப்பர்வத மாகி நின்ற"தென விஷ்ணுதேவருக்குச் சொல்லி இலிங்கத்துள் அந்தர்த்தானமாயினர்.

# யுத்தபுரி

# வேம்படி விநாயகர் வரலாறு

தேவரும் அசுரரும் முன்னோர் காலத்தில், தாம் தாம் பராக்கிரமத்தி லதிகராய், ஒருவர்க்கொருவர் நெடுங்காலம் யுத்தம் பண்ணினதில் தேவர்கள் தோற்க, அசுரர் அதிக மதோன்மத்தர்களா யுலகங்களை யெல்லாம் உபத்திரவஞ் செய்யக்கண்டு, தேவர் முதலானோர் முறையிடலும், விஷ்ணுதேவர் அசுரரை எதிர்த்துப் பாண வருஷங்களாற் சின்ன பின்னப்படுத்த, இறந்தவர்களொழிய உயிர் பிழைத்துப் புறங்கொடுத் தோடினவர்கள் பலவிடங்களினுஞ்சென் றொளித்துக்கொண்டனர். சிலர் கோபமூண்டெதிர்த்துப் போர் செய்ய, அவர்களையும் மாய்க்கத் தொடங்கினபோது, அவர்கள் வலிமையற்று நிராயுதராயோடுதலும், அவர்களை விடாமற்றொடர்ந்து விஷ்ணுதேவர் துரத்தியபோது ஓடி வந்த அசுரர், பிருகு முனிவர் தவஞ் செய்துகொண்டிருந்த ஆச்சிரமத்தைச் சந்தித்து,அம்முனியைச் சரணமடைய விசையாமல், நாமின்னுமெங்கே யோடிப்போவோமென்று பயந்து சுற்றிக்கொண்டிருந்த சமயத்தில், அங்கு நீராடி வருகின்ற பிருகு பத்தினியைக் கண்டு சரணமடைந்து தமது குறைகளைப் பலவாறு சொல்லி யிரக்க, பிருகு பத்தினி கேட்டு, "நீங்கள் தேவர்க்கும் முனிவர்க்கும் சென்ம விரோதிகளான துர்க்குணமூர்க்கராதலால் அபயங் கொடே"னென்று சொல்லி மறுக்கவும், அசுரர் காலைச்சுற்றிய பாம்பு போலப் பத்தினி காலில் வீழ்ந்து விட்டுத் தொலையாமல், அநந்த விதமாகக் குறையிரந்து, ஓவென்றலறிக் கூச்சலிட்டுத் துயரப்பட்டதற்கிரங்கி, அவர்களை அபயாஸ்தங் கொடுத்தாதரிக்க, பின்னே துரத்திய விஷ்ணுதேவர் அங்கு வந்து அவர்களைக் கண்டெதிர்க்கப் பிருகு பத்தினியும் அவரைப் பிரார்த்தித்துச் சொல்லிய வார்த்தைகளை அநாதரவு செய்து தயை பாராட்டாமல் அவ்வசுரரைத் தாக்கத் தொடங்குதலும், பிருகு பத்தினி பின்னும் விஷ்ணுவை நோக்கி அநந்த ஞாயங்கள் சொல்லியுங் கேளாமலெதிர்த்தார். பிருகு பத்தினி, "அபயாஸ்தங் கொடுத்தவளையன்றோ முன்னே சங்கரித்துத் தோற்று வந்த அசுரர்களை (ஞாயமானல்) பின்னே சங்கரிக்கவேண்டுவ"தென்று

சில கடுஞ் சொற்களால் கண்டிக்கத் தொடங்குதலும், அதிக கோபங் கொண்டு விஷ்ணுதேவர் அவள் கழுத்தைச் சக்ராயுதத்தால் அறுத்து வீழ்த்தினர். அதுகண் டங்கிருந்த ருஷிபத்தினிகள் கோவென் றலறியழுது விம்மினர். அவ்வழுகை யோசையாற் பிருகு முனிவர் தவத்தி னீங்கி விரைந்து வந்து, நடந்த கொடுமைகளைக் கேள்வியுற் றுக் கோப மிகுந்து, விஷ்ணுதேவரை அழைத்துச் சினந்து நோக்கி, "நமது பத்தினிக்கு மருமகனுகி யிருக்கின்ற நீ, உனது தாயார்க்குச் சமானமாக எண்ணத் தக்கவளை ஹத்திசெய் தென்னையும் உபேக்ஷை செய்தனையாகையால் நீ பத்து ஜனனத்தை யடையக்கடவை"யென் றும், திருமகளை நோக்கி "நீயும் உனது தாயாருடைய கொலையை உபேக்ஷையால் பார்த்துக்கொண்டு, உன் கணவன் மார்பினிடத்துத் தயை எட்டுணையுமில்லாமல் மரம்போ லிருந்தா யாகையால் கசப்பாகிய வேப்ப மரமாகக் கடவை"யென்றும் சபித்து விட்டுச் சுக்கிராசாரியரை வருவித் தவரைக்கொண்டு மிருத சஞ்சீவினி மந்திரத்தா லற்றகழுத் தைச் சேர்த்துப் பத்தினியைப் பிழைப்பித்து, அவளுடன் பர்னசாலை யிற் பிரவேசித்துத் தவத்தி லிருந்தனர்.

பிருகு முனிவராலடைந்த சாபத்தால் திருமகள் சொல்லற்கரிய மனோதுக்கமுற்று : "முனிவர்களுக்குச் சிவயோகமே உயிர்க் குறுதி யாம். அச்சிவயோகம் விக்கிநேசுவரரால் இடையூறின்றி முடிகூடும். யோகியர் தியானிப்பது ஓங்காரமாம். பலவகை மஹா மந்திரங்கட்கும் மேன்மையுள்ளதாகிய பிரணவம் வேதத் துட்பொருளாகி யோகிய ருள்ளத்தின்கண் பெரிய சுடரொளித்திரளாய் நிலைபெற் றிருக்கின்ற தாகும். அப்பிரணவமே விக்நேசுவரரது திவ்யசொரூப மாகுமென வேதாகம நூல்கள் முறையிடுதலால், பிள்ளையாரது கருணையாகிய துணையால் இத் துன்பத்திற்கு முடிவு காணக்கூடும்" என்றிவ்வாறு சிந்தித்து வந்து, யுத்தபுரியிலுள்ள பிரணவகிரிச்சாரலின் வனத்திற் கண்ணுவ முனிவரது ஆச்சிரமத்தினருகே திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கும் விக்நேசுவரரைச் சேவித்துத் துதித்து, அன்புருவாய்க் கண்ணீர் பெருகப் பிரார்த்தித்துக் குறையிரக்க, பிள்ளையார் ஊர்த்த முகத்ததாகிய மூஷிகவாகனுருடரா யெழுந்தருளித் தரிசனை கொடுக்க, மீண்டும் திருமகள் பலவாறு சுவாமி திருநாமங்களால் தோத்திரஞ் செய்து போற்றி, முன்னடந்தவற்றையும், பிருகு முனியால் விஷ்ணு

தேவர்க்குந் தனக்கும் சாபம் வந்ததையும் விண்ணப்பஞ் செய்ய, விநாயகர் அருளிச்செய்கின்றனர் :

“சர்வலோகங்களுக்கும் நிமித்த காரணராய், தமது திருவருளே சத்தியாகக்கொண்டு அநாதி மலமுக்தராய், அனைத்துயிர்க்கும் உயிரும் உணர்வுமாகித் தானசைந்தாலன்றி உலகுயிர்கள் சிறிதும் அசையாவாக எல்லாமும் தன் வயத்தேயாகப் பசுபதியாகிய உடையவராய், பெருமைகளுட் பெருமையும் நுட்பங்களுள் நுட்பமுமாகி எங்கு நிறைந்திருக்கின்ற சிவபெருமானுக்கு மனமாதி மூன்றும் நல்ல அடியவராயினர் எவைக்கும் எவர்க்கு மேலோர். அவ்வடிமைத் திறத்தினுள்ளாராகிய முனிவரது சாப வலிமை நம்மாலும், பிரமாதிகளாலும் எளிதில் நீக்கரிது. ஆயினும் அஞ்சவேண்டாம். திருமகளே! நீ அந்த நிம்ப விருக்ஷ வடிவாகியே யிங்கு நிலைபெற்றிருப்பாயாக. அதனடிக்கண் நாமும் நீங்காமல் வீற்றிருந்து சகலருக்கும் இடையூறுகளை நீக்கி நன்மை செய்கின்றோ”மென்ன, அவ்வாறு திருமகளும் அம்மரமாகி நிற்க, அதன் மூலத்தில் தாமும் வீற்றிருந்தருளலும், தேவர் மலர்மாரி பொழிந்தனர் ; தேவதுந்துமிகள் முழங்கின ; சகல முனிவரும் உலகத்திலுள்ளோரும் குதூகலித் தாநந்த முற்றனர்.

வேம்படி விநாயகரது புகழைத்துதித்தவர் புண்ணியராவர். அவ்விருக்ஷத்தை முறையாற் பிரதக்ஷிணம் செய்தவர் பிறவித்துன்பங்களை வெல்வர். பிள்ளையாரைப் பூசித்தவர் எல்லா விரதங்களையும் குறைவில்லாமற் செய்தவராவர்.

யுத்தபுரியாகிய திருப்போரூரின்கண் எத்தகையோர்க்கும் சேவை தந்தருளத் திருவுளங்கொண்டு ஸ்கந்தர், பிரமன் இந்திரன் முதலியோரை வரும்படிக் கடாக்ஷிக்க, அவர்கள் யாவரும் அங்கடைந்து வேதாகம முறையாற் பூசித்து வணங்கிச் சந்நிதியினிற்க, ஸ்கந்தர் அவரைக் கடைக்கணித்து, “வருடந்தோறும் உத்தராயண கும்பரவியிற் பூருவ பக்கத்திற் சகலாத்ம கோடிகளுக்கும் நமது சேவை யெளிதிற் சித்திக்கும்படி திருவிழாச் செய்க”வென அநுஞை தந்தருளலும், கேட்டுப் பரமாநந்த பரிதரா யவ்வநுஞையை மேற்கொண்டு ஆடிப் பாடித் துதித்துப் பெறுதற்கரிய பெருஞ் செல்வம் பெற்றோராய், வள்ளி தெய்வயானையாருடன் ஸ்கந்தருக்கு முறையே மஹோற்சவங்களை விபவமாக நிறைவேற்றித் தாந்தாமிச்சித்த வரங்களை யெல்லாந் தந்தருளப்பெற்றனர்.

அதன் பின்னர், பிரணவ கிரீசராகிய ஸ்ரீபாலாம்பிகை பாக தியாக கைலாச நாதர்க்கும் வேம்படி விநாயகருடன் ஸ்ரீஷண்முகர், சகலதேவரும் முனிவரும் அடியார்களும் சூழ வேதாகம விதிப்படி மஹோற்சவ நடாத்திச் சிவபெருமானது திருவருள் பெற்று, அக் கடவுளுடன் திருப்போரூர்த் தலத்தின்கண் கிரியாசத்தியும் ஞான சத்தியுமாகிய தேவியரிருவருடன் திருக்கோயில் கொண்டு, வேத நெறி, ஆகமநெறி, பக்திநெறி இவற்றைக் கைவிடாமல் ஒழுகாநின்ற மெய்யடியார்களுக்கும், முனிவர் தேவர் முதலியோர்க்கும் கிருபை செய்துகொண்டு, தாமும், வேம்படியில் விநாயக மூர்த்தியும் வீற்றிருந் தருள்கின்றன"ரென் றிவ்வாறு சூத புராணிகர் நைமிசாரணிய முனி வரர் ஜென்மசாகரத்தைக் கடக்கும்படி யுத்தபுரி க்ஷேத்திரத்தின் மஹாத்மியத்தைச் சொல்லியருளினர்.

**திருப்போரூர்த் தலபுராண சரித்திரச் சுருக்கம் முற்றுப்பெற்றது.**

இப் புராண வரலாறுகளுள், கந்தபிரான் சிவபிரானைப் பிதா முறையில் வணங்கியதாகக் காணப்படல், சிவபிரான் கல்லாலடிக்கண் யோகிருந்ததுபோல், மகார் பிதா மாதாக்களைத் தொழல் அபிவிருத்தியாமாறு பரப் பிரயோசன மாகச் செய்து காட்டியதாம்.

உ

முருகன் துணை

# திருப்போரூர் வெண்பா



## வேம்படி விநாயகர்

### காப்பு

சீர்வரு கூர்வேலர் திருப்போரூர் மாலைசொல
நேர்வருமென் னெஞ்சமே நின்மலனார்—ஆர்வமிக
வாம்படிவி னாயகரை யாறுமுக னார்துணைவர்
வேம்படிவி னாயகரை வேண்டு.

மாமணிசூழ் கோபுரஞ்சீர் வாய்ந்த விராட்புருடன்
பூமணிசூழ் மோலியெனும் போரூரே—தாமப்
பணிகை வரையார் பரிந்தளித்த வேலர்
தணிகை வரையார் தலம். க

வேதகிரி யோமெழுத்து வெற்புவி ராட்டிருதோட்
பூதகிரி யாயோங்கும் போரூரே—ஓதகிலம்
பாரித்த போதகத்தார் பண்டிறங்க வோமருத்தம்
பூரித்த போதகத்தார் பொற்பு. உ

பொற்பரவை நற்பரவை போலிடையும் வாட்கணுங்கொள்
பொற்பரவை யிற்பயிலும் போரூரே—சொற்பரவை
யாழங்கண் டாதரிப்பா ரல்லல்செயும் வல்வினையின்
ஊழங்கண் டாதரிப்பா ரூர். ௩

ஆசை யிருந்தவரோ டண்டருமா டிக்கொருநாட்
பூசை புரிந்திறைஞ்சும் போரூரே—ஓசைதரு
வானநில மாவார் வளரெழுநா வன்னியொடு
மானநில மாவார் மனை. ௪

சேணாருங் கற்பகத்திற் சேரவரா மாதரிடும்
பூணாரந் தாங்குபொழிற் போரூரே—வீணார்வம்
உள்ளி மணாளன்பு றார்தொழுந்தெய் வப்பிடிவாழ்
வள்ளி மணாளன் மனை. ௫

போதகத்த ஞற்கோட்டுப் போதகத்தன் சூழ்கயிலைப்
போதகத்தன் மன்னுதிருப் போரூரே—மோதகக்கை
யாதி வரப்புணர்ந்தார் அன்றுகுற மாதையநு
பூதி வரப்புணர்ந்தார் பொற்பு. ௬

பூவையனை யின்றமலர்ப் பூவையனை மார்பிலுறை
பூவையனை யார்போற்றும் போரூரே—ஆவரண
வஞ்சமலர்த் தொட்டிலார் வான்சரவ ணத்தினிற்பொற்
கஞ்சமலர்த் தொட்டிலார் காப்பு. ௭

புற்ருளி கற்பணியாப் பூங்குருந்தை யேங்கமந்தி
புற்ருளி காட்டுதுறைப் போரூரே—வற்ருத
தங்கருணை வைப்பார் தடங்கோ புரவடபால்
தங்கருணை வைப்பார் தலம். ௮

பூவைமேவு காவிவாவி பூவைவாவு மாவுலாவு
பூவைமேவு காவிராவு போரூரே—கோவையார்
பாடப் பதித்துவைத்தார் பாலிக்க வெஞ்சூர
ஞேடப் பதித்துவைத்தா ரூர். ௯

சாருமாடம் வித்தகம்வெண் டார்புத்த கங்கொண்டு
பூரவாக ணிக்குநிகர் போரூரே—வாரிதிசூழ்
செந்திற் பதியார் தினந்துதியார் புன்மனமாம்
அந்திற் பதியா ரகம். ௧௦

மால்பெற்றுத் தாமரைமேன் மன்னிநால்வாய் தாங்கியயன்
போல்வெற்பு நீடுதிருப் போரூரே—சால்வெட்சிப்
பூவைத் தரித்தார் புலவர்க்கா மாவையரு
ளேவைத் தரித்தா ரிடம். ௧௧

பாசிழைய ரம்பைமென்பொற் பைந்தருந யந்தமுத
போசனமால் சோலைநிகர் போரூரே—நேசத்
திருவே ரகத்தார் இயல்தா ரகத்தார்
திருவே ரகத்தார் செறிவு. ௧௨

மாசடையார் வாண்மதியால் மாமறையாற் சங்கமதாற்
பூசுரர்மும் மூர்த்தியெனும் போரூரே—தேசுதிகழ்
ஆறுபடை வீட்டார் அடற்சூர ஞலமரர்
வீறுபடை வீட்டார் வியப்பு. ௧௩

தாக்கற்ற நோக்குடையார் தாமிறைஞ்ச மீட்சியொடு
போக்கற்ற வாக்கமல்கும் போரூரே—மூக்கின்
இரைத்தவந்த ணத்தா ரிறைஞ்சுபர மன்பா
லுரைத்தவந்த ணத்தா ருவப்பு. கச

ஆரணர்க்கும் நாரணர்க்கும் யார்க்குமயி லோன்சேவை
பூரணத்தின் நல்குதிருப் போரூரே—காரணத்திற்
காரிய மூன்றினர் காணும் பதிமுதலாச்
சீரிய மூன்றினர் சேர்வு. கரு

கள்ளவித்தை யாற்றசுரர் கார்வரையின் முன்னொளித்த
புள்ளுவத்தை மாற்றுதிருப் போரூரே—கொள்ளவித்தை
யாண்டலைப்ப தாகையா னூர்வலர்மா யாதெடுத்த
ஆண்டலைப்ப தாகையா னூர்பு. கசு

செந்திருவும் வெண்பதுமஞ் சேர்திருவும் அன்புசெய்வோர்
புந்தி களிக்கவரும் போரூரே—அந்தி
நிறத்தார்க்கு மெய்யர் நெடுங்கலைஞா னந்தேர்
அறத்தார்க்கு மெய்ய ரகம். கஎ

நாததத்து வங்கடந்த நாதனைப்பூ சிக்குநல்லோர்
பூதசுத்தி யாதிசெயும் போரூரே—போதசித்தி
கண்டார்க் களிப்பார் கருமா மலப்பற்று
விண்டார்க் களிப்பார் விருப்பு. கஅ

கற்றை நிலாவநந்தங் கண்டெனச்சா ரற்பளிக்குப்
பொற்றை பலவிளங்கும் போரூரே—வெற்றுநூல்
கத்திக்கு வித்தார் கணக்கில்கற்ப முந்தெரியா
முத்திக்கு வித்தார் முதல். ககூ

நச்சாப் பெருங்கரண நான்கும் பணியவையர்
பொச்சாப்பின் றித்தவஞ்செய் போரூரே—கைச்சார்
எடுத்தபெரு மானார் இடமகலார் அன்பர்
அடுத்தபெரு மானா ரகம். உ0

காட்சிமுகில் தோய்ந்திருள்கூர் காமலர்கொய் மாதரெழிற்
பூட்சி யொளிவிளக்காம் போரூரே—மாட்சியொரு
காற்றுப் படையார் கருதரிய கீரனுரை
யாற்றுப் படையா ரகம். உக

கோகிலம்பண் கூட்டமயில் கூத்தாடக் கண்டுவரைப்
போகிமணிப் பையவிழ்க்கும் போரூரே—ஆகமஞ்சொன்
முத்தி விடுத்தகலார் மொய்ம்மதியாற் காணுதார்
பத்தி விடுத்தகலார் பற்று. ௨௨

வீட்டைப் பிரணவநீர் வீழ்ந்தாடி ஞோர்க்கவித்தைப்
பூட்டைத் திறந்துதவும் போரூரே—நாட்டவிளக்
கந்தாளுக் கேற்றுர் அறியார் திருவெனுமான்
றந்தாளுக் கேற்றுர் தலம். ௨௩

காப்பயில்பொன் னூசலிடைக் காரிகையார் முல்லைமலர்
பூப்ப நகைத்தாடும் போரூரே—நாப்பகர்பா
வோதற் கினியார் உனையலா லென்றுரைப்போர்
காதற் கினியார் கனிவு. ௨௪

மீதெகினங் கன்னியைமா மீனை விழுங்குமிறும்
பூதுகண்டி யாருமகிழ் போரூரே—ஓதுறும்பா
மாலை மலையார் மருவும் பழமுதிர்
சோலை மலையார் தொடர்பு. ௨௫

காழிலவங் கம்மேலங் கார்வரையா ரங்கோட்டம்
பூழின்மணம் வான்பரவும் போரூரே—யூழெண்
றிலகுவலன் சூழ்வந்தா னேங்கா தருள
உலகுவலன் சூழ்வந்தா னூர். ௨௬

வெள்ளனக்கு றாமெழுந்து மென்பழனத் தின்மேதி
பொள்ளெனப்பா யச்சிலம்பும் போரூரே—கள்ளத்
தமரக்கோட் டத்தார் அறிவரிய கச்சிக்
குமரக்கோட் டத்தார் குடி. ௨௭

வீசு கடன்முழக்கை மெய்யடியார் போற்றிசைக்கும்
பூச லடக்கிமிகும் போரூரே—ஈசராற்
சத்திதந்தான் சத்திதந்தான் தாங்கியிரு ளைவெல்லுஞ்
சத்திதந்தான் சத்திதந்தான் சார்பு. ௨௮

நட்புறமூழ் கிற்பெருக்க நல்கும்வள்ளை யாரோடைப்
புட்கரிணி பாற்கடனேர் போரூரே—உட்கும்
பொறியமலர் மாலையார் பொன்னூர் கடம்பு
நறியமலர் மாலையார் நாடு. ௨௯

நீடணிவா விப்பதும நேரிழையார் மாமணிப்பொற்
பூடணம்வில் வீசமலர் போரூரே—ஆடற்
றிரிபுர மன்றெரித்தார் சேயரன்பர்க் கட்ட
புரிபுர மன்றெரித்தார் பொற்பு. ௫௦

கற்கடமெ லாமுழுன்ற காரிகைமா னீள்வரைசூழ்
புற்கலையா முன்னுருவாம் போரூரே—பொற்கிரிசூழ்
சாரற் புரந்தான் தகுமெனுமா டக்கூடற்
கீரற் புரந்தான் கிளர்வு. ௫௧

விண்டவ்ழ்மே டத்தை விரவியுத்த வான்கிரிமேற்
புண்டரிகங் கண்டுறவாம் போரூரே—தொண்டர்
முருகாவென் பார்வாண் முறுவலுமை மைந்தா
இருகாவென் பார்வா ழிடம். ௫௨

சேட்கவினுங் கோளரிக்குத் தேனையிரு லள்ளிமலைப்
பூட்கையெடுத் தூட்டவரும் போரூரே—யாட்கொண்டு
போற்றுநரை நோக்கார் பொருளாக்கு வாரன்பு
மாற்றுநரை நோக்கார் மனை. ௫௩

நன்மையெலா மெவ்வெவர்க்கு நாடிப் பணியநல்கிப்
புன்மையெலா நீக்கியருள் போரூரே—வன்மை
மனத்தார்க் களியார் மலரடியை நல்ல
வினத்தார்க் களியா ரிடம். ௫௪

ஆகூழ லாலெம்மா னன்புபுரி வார்க்கென்றும்
போகூ ழெதிர்ப்படாப் போரூரே—நாகூருங்
கந்த புரியான் கழல்கருதி லார்கட்கு
வந்த புரியான் மனை. ௫௫

தன்கண் பிருகுமொழி தாங்கு மலர்மகளப்
புன்கண் கடக்கவரும் போரூரே—மென்கருணை
யும்பா லருந்தினு ருள்ளூவப்பப் பார்வதியார்
தம்பா லருந்தினார் சார்பு. ௫௬

கார்த்திகெய னைப்பணிந்து காதற் பிரணவமுன்
பூர்த்திவரம் பெற்றமரும் போரூரே—சீர்த்திப்
புகழ்வரம்பு கன்றூர் புநிதமுற வென்று
நிகழ்வரம்பு கன்றூர் நிறைவு. ௫௭

நித்தியகல் யாண்மால் நின்று டியிலிறைஞ்சப்
புத்தேளி ரோடணையும் போரூரே—முத்தித்
திருவை யுடையார் தெளிந்தாரை யெண்ணார்
கருவை யுடையார் களிப்பு. ௩அ

சீரணி பொற்குன்றிற் சிவமுனிவா லம்பிகையாம்
பூரணிபா கற்பரவும் போரூரே—தாரணியோர்
எண்ணுநரை யேற்றார் எழிற்குமரர் பொய்ம்மையினி
னண்ணுநரை யேற்றார் நகர். ௩௯

தாதார்நா ழற்புதலிற் றண்மணியை யண்டமெனப்
போதா வடைகாக்கும் போரூரே—ஆதாரம்
ஆதேய முன்னுவார் அண்டபகி ரண்டமொடு
மாதேய முன்னுவார் வாழ்வு. ௪0

கோதைமுகங் கஞ்சமென்று கூடுஞ் சுரும்பவர்கண்
பூதையெனக் கண்டஞ்சும் போரூரே—மேதைநெறிக்
கண்ணுவர் வந்திப்பார் ககனத்து ளோருய்ய
எண்ணுவர் வந்திப்பா ரிசைவு. ௪க

ஈன்றமணி மாதர்நகை யேய்ந்திலக வொண்மிடறு
போன்றுவளை யூரும்வயற் போரூரே—வான்றொடுத்த
கார்த்திகையின் பாலார்ந்தார் காசினியோர் ஈடேறக்
கார்த்திகையின் பாலார்ந்தார் காப்பு. ௪௨

தக்கதவ மூகைமுனி சார்ந்து சிவபூசை
பொக்கமகன் றியற்றும் போரூரே—மைக்கண்
ணிகர மகரத் துவசனே ராவகர
வுகரமக ரத்துவச னூர். ௪௩

அம்மடமான் கோலமகன் றண்டாயி ரந்தவந்தான்
பொம்மலொடு செய்யாள்செய் போரூரே—செம்மை
பெறுமைக் கருத்தர் பெரியோ ரறியு
மறுமைக் கருத்தர் மனை. ௪௪

ஆதவந் தணித்துநிழ லாங்களித்து நல்லறனெனப்
பூதவம்புள் ளுண்கனிநேர் போரூரே—மாதவஞ்செய்
தஞ்சரிக்கி ருந்துணையார் ஆதரித்துப் போற்றுதெய்வ
குஞ்சரிக்கி ருந்துணையார் கொட்பு. ௪௫

பார்வணங்கு செவ்வேள் பராத்தமுறை யானையுரிப்
போர்வையண்ணல் பூசைபுரி போரூரே—நீர்வையத்
தூனப்பேர் வாசியார்க் குற்றதுணை யானார்மெய்ஞ்
ஞானப்பேர் வாசியார் நாடு. சசு

பூதியணி கண்ணுவப்பேர்ப் புண்ணியனார் போற்றியநற்
பூதிவிளங் கத்தவங்கூர் போரூரே—சோதிமணி
வீறக் கரத்தர் விசுவாதி தப்பரம
ஆறக் கரத்தர் அகம். சஎ

மாணியனுந் தாரகப்பேர் வண்கிரியிற் சேவினமேற்
பூணியைம ணந்தோங்கும் போரூரே—வாணிபதி
யைத்தகவி னுவினார் அன்றுபொருட் டஞ்சரிதை
வைத்தகவி னுவினார் வாழ்வு. சஅ

வேறிக் கமலநிம்ப மென்மரமா வாண்டுறைந்து
பூரித்தே ரம்பனருள் போரூரே—சேர
மறப்பிறப் பற்றார்தம் வன்மனத்தின் மேவார்
பிறப்பிறப் பற்றார்தம் பெட்பு. சகூ

நேசித்தோ ராகமத்தா னீள்கயிலை நாதரைமால்
பூசித்துப் பொன்மணக்கும் போரூரே—வாசிக்க
வேதங் கொழித்தார் வியன்புகழைப் பேசுமவர்
தீதங் கொழித்தார் செறிவு. ருO

சிலேடை

நன்னா ரியர்கொங்கை நற்றடத்தின் மாளிகையிற்
பொன்னார மேவுதிருப் போரூரே—பன்னகப்
பூணம் புயத்தார் புதல்வரடி யார்க்கருடாண்
மாணம் புயத்தார் மனை. ருக

கோபால னன்றுவரங் கொண்டுதட மேற்கொண்டு
பூபா லனந்தரிக்கும் போரூரே—மாபாத
கங்களிலார் வந்தழைத்தார் கண்ணிருந்தா ரன்பகலார்
தங்களிலார் வந்தழைத்தார் சார்பு. ருஉ

பொன்னாக மீதுட் பொருநாக மீதளவில்
புன்னாக மன்னுதிருப் போரூரே—முன்னாளிற்
சேர்மா வரித்தார் திருவருளின் சீர்விரித்தார்
சூர்மா வரித்தார் துறை. ருங

கற்பந் திருவினருங் கார்வரைசூ ழும்புனமும்
பொற்பந் தினையாடும் போரூரே—அற்பங்கொ
ளின்பங் குரைத்தார்க் கிணங்கா ரடியார்க்கென்
றன்பங் குரைத்தா ரகம். ருச

எண்ணிய மங்குறையா ரெங்கைநா மஞ்சொல்கிளிப்
புண்ணிய மங்குலவும் போரூரே—யெண்ணிலா
தேறு முகத்தா ரெழிற்பன் னிருகண்ணார்
ஆறு முகத்தா ரகம். ருரு

மேனகையன் னார்கை விரலுமிசை யில்லுமதி
போனகம்வி ராவுதிருப் போரூரே—ஞானப்
பழநி மலையார் பயந்த புதல்வர்
பழநி மலையார் பதி. ருசு

கோதகங்கொ ளாமுனிவர் கோடியர்வா விப்பணிலம்
போதகங்கு லாவுதிருப் போரூரே—பாதகமொன்
றும்பணிக்க வைத்திடார் உன்னினரைத் தாம்வேத
கம்பணிக்க வைத்திடார் காப்பு. ருஎ

மேகம் பயிலவயன் மேவுகயல் பாயநறும்
பூகம் பொருவுதிருப் போரூரே—மூகங்கொள்
வீறுநய நத்தார் வியந்துதொழ வந்தருளீ
ராறுநய நத்தார் அகம். ருஅ

கொங்கவிழ்தார் மன்னருந்தண் கூர்பொழிலு மிக்கவரும்
புங்கவின்ம ருததிருப் போரூரே—கங்கையெனும்
ஈராறு கையார் இரண்டாறு கையார்சீர்
ஈராறு கையார் இடம். ருகூ

என்று லயத்துச்சி யிற்குடையின் வாவியின்பூப்
பொன்று தவிருந்தண் போரூரே—குன்றுத
பேரன் புடையார் பெருமான் றிறல்வாகு
வீரன் புடையார் விருப்பு. சுO

விட்பங் கணமென்ன வெண்கமலே யென்னவனப்
புட்பங் கயமாரும் போரூரே—நட்புப்
பெருகந் தரத்தார் பிழைக்க வருளால்
வருகந் தரத்தார் மனே. சுக

மாத்தா ரரசர்பான் மாமறையோ ரோதிமங்கள்
பூத்தானத் திற்கூடும் போரூரே—நீத்தார்தம்
உள்ளச் சினகரத்தார் ஓங்குமகி லாண்டவுயி
ருள்ளச் சினகரத்தார் ஊர். கூஉ

தொக்கசிலம் பின்முகட்டிற் றொல்பதியிற் செய்திடுமன்
புக்கரு ணன்கதிர்க்கும் போரூரே—மிக்க
தனத்தை யளித்தான் றனதுபணிக் கேற்றும்
இனத்தை யளித்தான் இடம். கூ௩

சேண்டவழ் மாடத்திற் றிருமறுகின் மாதர்தார்
பூண்டயங்க விந்தாடும் போரூரே—மூண்ட
திருவா வினன்குடியார் சேணூர் வரைசூழ்
திருவா வினன்குடியார் சேர்வு. கூச

தீதஞ்சும் வாவிமணஞ் செய்புணின்ற ணைந்துகடற்
போதஞ்சங் கூருமெழிற் போரூரே—வேதங்க
டந்தூர்க் குவந்தார் தரியலரை வாட்டமுன்னாட்
செந்தூர்க் குவந்தார் செறிவு. கூரு

யோகா திபருணர்ந்தும் உத்தமர்ப ணிந்துமென்றும்
போகாதி யாருமுறை போரூரே—தேகாதி
தாமென் றொளியார் தமரென் றிடுகருணை
யாமென் றொளியா ரகம். கூகா

வெங்கதிரை யஞ்சிவந்தோர் மெல்லியர்பூ வல்லியிடை
பொங்கரவ மாற்றுதிருப் போரூரே—சங்கரர்முன்
போதந் தெரிந்தான் புணர்ப்பிலார்க் கோதுபிர
சாதந் தெரிந்தான் தலம். கூஎ

கல்விக் கயமுனிக்குக் காதலர்க ளோடலுக்குப்
புல்விக் களிக்குந்தென் போரூரே—வல்லிக்கு
வாங்கு மிடையார் மதங்கலுழ்வா ரிப்படிந்தோர்
பாங்கு மிடையார் பதி. கூஅ

ஆதார வண்டுபொழில் ஆடிமதிக் கண்டர்புறம்
போதார வாவுமெழிற் போரூரே—வேதா
சிறைவிடு வித்தார் தெளிவுளோர்க் கியாண்டு
நிறைவிடு வித்தார் நிகழ்வு. கூகூ

வட்கலிலா மாளிகையும் வார்வயலு நன்காக்கம்
புட்கல மல்குதிருப் போரூரே—கொட்புறுபுட்
கோனிவரு மாதவனூர் கூடு மெழின்மருகர்
மேனிவரு மாதவனூர் வீடு. எ௦

மாத்தமர நீள்கோயில் வண்பொழிலின் மாதரளி
பூத்தமலர் நாடுதிருப் போரூரே—தேத்தணியல்
இந்தீ வரத்தார் எழிற்புயத்தார் நண்பினர்க்கு
வந்தீ வரத்தார் மனை. எக

காணக் கிளர்மாடங் காரிகையார் கண்சேலைப்
பூணக் கொடிதிகழும் போரூரே—மாணக்கூர்
வாரணனு ராரணனூர் வாழ்த்துமொரு கோட்டுமுக
வாரணனு ராரணனூர் வாழ்வு. எஉ

தேச மணித்தெரொடு தேவர்திருக் கோயில்சங்கம்
பூசமதிற் சூழுந்தென் போரூரே—வாசமலர்ச்
செய்யுளலங் காரத்தார் தென்மதுரைக் கண்ணுணர்த்தும்
செய்யுளலங் காரத்தார் சேர்வு. எ௩

ஆதரங்கொ டோர்ந்துதொழ அச்சுரர்மீக் கண்டுதொழப்
பூதரங்க மோங்குதிருப் போரூரே—மாதரங்க
மேற்று ரளித்தா ரிருக்குநதி வேணியர்வெள்
ளேற்று ரளித்தா ரிடம். எச

பாதகங்கைக் குந்தடமும் பைங்காந் தளுமின்னார்
பூதகங் கைக்குநிகர் போரூரே—கோதகங்கூர்
வல்லசுர ருக்கிசையார் வந்து சரணமெனு
நல்லசுர ருக்கிசையார் நாடு. எரு

காவணங்கொண் மண்டபங்கள் காரிகையார் மாளிகைகள்
பூவணங்கு லாவுதிருப் போரூரே—நோவணங்கு
பாற்கரனூர் முன்னோர் பனிபோலச் செய்மணிக்கூர்
வேற்கரனூர் முன்னோர் விருப்பு. எசு

மொய்க்கா தகத்தைநன்னீர் மூழ்கமுனி வோர்வைகப்
பொய்க்கா தலைத்தடுக்கும் போரூரே—யெய்க்காமல்
யாவருக்கு முன்னவனூர் ஆகவருள் செய்வாரெத்
தேவருக்கு முன்னவனூர் சேர்வு. எஎ

சேதனக்கோ லத்தவருஞ் செந்தமிழ்தேர் மாணவரும்
போதனைக்கா லைக்காயும் போரூரே—வேதனைக்காம்
பங்கத் தமிழார் பரவுந் திருமதுரைச்
சங்கத் தமிழார் தலம். எஅ

சீரியங்கன் பார்க்குநல்லார் சேர்ந்தவர்க்கு நீதிநெறி
பூரியங் கூட்டுமெழிற் போரூரே—நேரியங்க
வீறு செவியார் வியக்குமணிப் பொற்குழையீ
ராறு செவியா ரகம். எகூ

பாருவந்த கண்ணுவர்சா பத்துயர்மா மையன்மினார்
பூருவந்த வர்க்கறுக்கும் போரூரே—போருவந்த
காதகரை மன்றகைத்தார் காப்பரிய வேள்விவரு
மாதகரை மன்றகைத்தார் வாழ்வு. அ0

கட்கரம்வாள் காந்தளொப்பார் கண்மருங்கு லுங்குழலும்
புட்காரங்க டுக்குந்தென் போரூரே—கட்கவரும்
அன்பர்க் கணியார் அருணெறிநோக் கிப்பணியா
வன்பர்க் கணியார் மனை. அக

காக்குமன்பர் கட்குமியோ கர்க்கு மருள்போகப்
போக்கியங்கொ டுக்குஞ்சீர்ப் போரூரே—நோக்கி
லிலகா தவரனையார் விஞ்ஞான வொள்வேல
இலகா தவரனையா ரின்பு. அஉ

ஓவா வெழுமலர்க்கா வொண்ணுதலார் காரளகம்
பூவாய் கொழுநனையேய் போரூரே—மூவாசை
மாதா கமவித்தார் வாழ்மனத்தை யாதரித்தார்
வேதா கமவித்தார் வீடு. அஙூ

அல்லகன்றூர் சிற்றறிவை யாலையிர தத்தைமள்ளர்
புல்லகண்ட மாக்குதிருப் போரூரே—வல்லகந்தை
நீத்தார் புனைவார் நிழல்செய்செந்தி லார்நீப
மாத்தார் புனைவார் மனை. அச

மைக்கலைக்கண் ணார்தனமு மாளிகையு மன்னியவெற்
புக்கலைக் கின்றதிருப் போரூரே—மிக்கலைக்கும்
கோதஞ் சுவற்றினார் கூர்தவமி டேறவலை
யோதஞ் சுவற்றினா ரூர். அரு

நெஞ்சத்த யாவர்சர் நீள்புயமும் வில்லுமிழும்
புஞ்சத் துருவையிகல் போரூரே—அஞ்சி
முரணவ மால்வரையார் முந்த வறியாப்
பிரணவ மால்வரையார் பெட்பு. அசு

முன்ன ரளிமுரன்று முத்தரும்பிப் பொன்மலர்ந்து
புன்னை வளமடுக்கும் போரூரே—முன்னொருமை
போத மறுத்தார் புகழ்படித்தார் மும்மலமா
மேத மறுத்தா ரிடம். அஎ

ஓதந்த ணர்மனையு மும்பர்பூ சைக்கெவையும்
போதந்து வைக்குஞ்சீர்ப் போரூரே—நாதங்
கடந்தவித்த கத்தர் கலியிருளைப் பாதங்
கடந்தவித்த கத்தர் களிப்பு. அஅ

காமிக்கு நந்தவனங் காமர் மணிநிலைத்தேர்
பூமிக் கணிசெய்யும் போரூரே—தாமிருக்கும்
வேங்கடம்ப ணிந்திடுவார் வேண்டுபொருள் தந்திடுவார்
பூங்கடம்ப ணிந்திடுவார் பொற்பு. அகூ

தேம்பாய்முத் தாலடிசில் செய்பவரு நாவலரும்
பூம்பாவைக் கூட்டுதிருப் போரூரே—யேம்பாமல்
யாரங் கடுக்கார் அவர்க்குரு ருற்றவர்க்கு
வாரங் கடுக்கார் மனை. கூ௦

தங்கவரை யானன்பில் தாரகத்தை யாருமந்திற்
புங்கவரை யாக்கவரும் போரூரே—மங்கையர்பா
லார்வந் திருந்தா ரவருள்ளக் கோயிலிடை
நேர்வந் திருந்தார் நிகழ்வு. கூக

தோகையர்கண் டந்தனத்தின் சுந்தரத்தை வள்ளல்பொன்னைப்
பூகதரங் கோங்கநல்கும் போரூரே—நாகசுரர்
ஆண்டகையச் சங்களைந்தார் அம்புயத்தா ரைந்தருவாழ்
ஆண்டகையச் சங்களைந்தார் ஆர்பு. கூஉ

வேதிகைத்தூ ணுதுலர்சூழ் வேந்தர் தரமணிப்பொற்
போதிகையோ வாததிருப் போரூரே—மாதிகையோர்
வாள்வீசு மாமுனிவோர் மற்றையோர் மீதுகொடு
வாள்வீசு மாமுனிவோர் வாழ்வு. கூ௩

கொன்சாலு மாலின் குழக்கன்றைப் பான்மடியின்
புன்காலி கான்றழைக்கும் போரூரே—வன்காமர்
காழிக் கொடியார் கலப்பா ரவர்க்கரிய
கோழிக் கொடியார் குடி. ௯௪

கோற்றொடியூர்க் கொண்மர்மேற் கொண்டகய லந்தணர்வாய்
போற்றிருக்கு நீடுதிருப் போரூரே—சாற்றொருநால்
வேதத் திருக்கையார் வேலேந் தியகளினப்
போதத் திருக்கையார் பொற்பு. ௯௫

ஆந்திரும ணம்பெருக வன்றில்பிரிந் தாருருகப்
போந்திற் கலிக்குமெழிற் போரூரே—சேந்தமலர்க்
கஞ்சத் திருப்பார் கரத்திலன்பு ளோர்தலைப்பட்
டஞ்சத் திருப்பா ரகம். ௯௬

நீர்த்தடத்தை வாரிசமேல் நேரிழையா ராடவர்மேற்
போர்த்தலைக்க ணுடுதிருப் போரூரே—ஆர்த்தலையார்
பள்ள மிசைந்தார் பணியப் பொருளளித்தற்
குள்ள மிசைந்தா ருவப்பு. ௯௭

தாதுட்டே ணேச்சரகஞ் சார்காத லர்மாலைப்
போதுட் கவருமெழிற் போரூரே—மாது
சிலையுரு வத்திரித்தார் சீர்மருக ரோள்வேன்
மலையுரு வத்திரித்தார் வாழ்வு. ௯௮

எத்தகைய மாவளமு மேத்துதமிழ்ச் சங்கமும்பல்
புத்தகம லர்ந்திடுசீர்ப் போரூரே—மத்தகத்து
வாரணத்தி னுரியார் வாய்மை புகன்முதுநூ
லாரணத்தி னுரியா ரார்பு. ௯௯

சித்திரமின் கோயில்வலஞ் செய்யவிர தம்போற்றப்
புத்திரசம் பத்திவரும் போரூரே—சித்தசனூர்
கூரம்ப ருக்கிளையார் கோமளவா மத்தர்தரு
மேரம்ப ருக்கிளையா ரின்பு. ௧00

திருப்போரூர் வெண்பா முற்றிற்று.

## இந்நூலில் ௫௧ - வது வெண்பா முதலாகவுள்ள

## சிலேடைச் சொற்களுக்குப் பொருளறிவித்தல்

௫௧. பொன், ஆரம், - (தனத்தில்) பொன்மாலை. பொன், நாரம், - (தடத்தில்) அழகாகிய ஜலம். பொன், ஆர, - (மாளிகையில்) திருமகள் நிறைய-மேவும்.

௫௨. பூ, பாலனம், - (கோபாலன்) உலகங்காத்தலை. பூ, பால், அனம், மலர்கள் வெள்ளன்னத்தை - தரிக்கும்.

௫௩. புன்னாகம் - (சுவர்க்கத்தின்மேல்) புன்னாகமரம். புல், நாகம், - (பிரணவகிரிமேல்) புலியும், யானையும், மன்னும்.

௫௪. பொற்பந்தினையாடும் - (திருவினர்) பொன்னாலாகிய பந்தை விளையாடும். பொற்பு, அம், தினை, ஆடும் - (புனங்களில்) பொலிவுள்ள தினைக் கதிர்கள் அசையும்.

௫௫. புண்ணியமங்குலவும் - (நியமங்குறையாரது) புண்ணியம் அங்கு உலவும். புள், நியமம், குலவும் - கிளிப்புள் நெடுந்தெருவிற் சஞ்சரிக்கும்.

௫௬. மதிபோல், நகம் - (கைவிரலில்) சந்திரன்போலும் நகங்கள். மதி, போனகம், - (மிசையில்லில்) மதிக்கின்ற உணவுகள் - விராவும்.

௫௭. போதகம் குலாவும் - (முனிவர்க்கு) ஞானம் குலாவும். போத, கங்கு, உலாவும் - (பணிலம்) மிகவரப்புக்களில் உலாவும்.

௫௮. பூகம், பொருவும் - (மேகம்பயிலக்) கமுகங்கள் பொருவும். பூ, கம்பு, ஒருவும் - (கயல்பாய) மலர்களைச் சங்குகள் நீங்கும்.

௫௯. அரும், புங்க, வில்மருத - (மன்னர்) அருமையாகிய அம்பும் வில்லும் நீங்காத. அரும்பும், கவின், மருத - (பொழில்) அரும்புகின்ற அழகு ஒழியாத.

௬௦. * பொன்றாது, அவிரும் - (குடைபோலக்) கெடாமல் விளங்கும். பொன், தாது, அவிரும் - (பூ) பொன்னிறத் தாதுடன் மலரும். * பொன்றுத - (குடைபோல்) கெடாத, இரும் - பெருமையாகிய எனவுமாம்.

௬௧. வனம் - புட்பம், கயம் (விண்மீன்கணம்போல) அழகுள்ள புட்பங்கள் தடாகங்களில். அனப்புள், பங்கயம் - (வெண்கமலைபோல) அன்னப்பறவை தாமரைகளில் ஆரும்.

௬௨. பூத்தானத்தில், கூடும் - (மறையோர்) பூமிதானம் பெறுதற்குக் கூடுகின்ற. பூ, * தானத்திற்கு, ஊடும் - (ஓதிமங்கள்) மலர்களிடத்தில் ஊடுகின்ற.
* வேற்றுமைத் திரிபு.

௬௩. மன், புக்கு, அருணன், கதிர்க்கும் - (முகட்டில்) மிகப் புகுந்து சூரியன் பிரகாசிக்கும். அன்புக்கு, அருள், நன்கு, அதிர்க்கும் - (பதியில் செய்யும்) அன்பினுக்குக் கிருபை நன்றாய் ஆரவாரிக்கும்.

௬௪. மாதர், தார், பூண், தயங்க, இந்து, ஆடும் - (மாடத்தில்) மகளிரது தாரும் பூணும் தோற்றுமாறு சந்திரன் சஞ்சரிக்கும். மாதர், தார்பூண்டு, அயம், கவிந்தாடும், - (மறுகில்) அழகுள்ள கிங்கிணி மாலைபூண்டு குதிரைகள் கவிந்து நடிக்கும்.

௬௫. போது அஞ்சம் கூடும் - (வாவியில்) மலர்மேல் அன்னம் (மணம்) செய்யும். போதம் சங்கு ஊரும் - (வயலினின்றும்) (கடல்) மரக்கலங்களில் சங்குகள் (சென்று) தவழும்.

௬௬. போகாது யாரும் உறை - (யோகாதிபர்) நீங்காமல் யாவரும் உறைகின்ற. போகம் ஆதி ஆரும் உறை - (உத்தமர்) போக முதலியவற்றை நுகர்ந்து வசிக்கின்ற.

௬௭. பொங்கர் அவம் ஆற்றும் - (அஞ்சிவந்தோரை) சோலைகள் வருத்தத்தைத் தணிக்கும். பொங்கு அரவம் மாற்றும் - (வல்லியிடை) சீறுகின்ற பாம்பை மாற்றும்.

௬௮. புல் இக்கு அளிக்கும் - (கயம் முனிக்கு - யானை கன்றுக்கு) புல்லுகின்ற கரும்பை அளிக்கும். புல்லி களிக்கும் - (காதலர்கள்) புணர்ந்து களிக்கும்.

௬௯. போது ஆர வாவும் - (வண்டு) மலரில் அமையத் தாவும். போதார் அவாவும் - (அண்டர்) போகாதவராய் விரும்பும்.

எ௦. நன்கு ஆக்கம் புட்கலம் மல்கும் - (மாளிகை) நன்மையாய்ச் செல்வம் நிறைவாக மல்கும். நன்கா கம்புள் கலம் அல்கும் - (வயல்) நன்கு ஆகச் சங்கு அணிபோலத் தங்கும்.

எக. அளி பூத்து அமலர் நாடும் - (கோயிலில்) அன்பு உண்டாய் அமலர்கள் நினைக்கும். அளி பூத்த மலர் நாடும் - (பொழிலில்) வண்டுகள் அலர்ந்த மலர்களைத் தேடும்.

எ௨. சேலை பூண் அக்கொடி திகழும் - (மாடத்தில்) சேலை பூண்ட அக்கொடிகளாடும். சேலை பூண கொடிது இகழும் - (கண்) சேற்கண்டையை உபமேயிக்க மிகவும் இகழும்.

எ௩. சங்கம் பூசம் அதில் சூழும் - (தேவர்) கூட்டம் பூச நாளில் வலம் வரும். சங்கம் பூசு அம் மதில் சூழும் - (கோயில்) சங்கச் சுண்ணம் பூசிய அழகுள்ள மதில்கள் சூழும்.

எ௪. பூதர் அங்கம் ஓங்கும் - (ஓர்ந்து தொழ) பூதர்களது அங்கம் நிலைபெறும். பூதரம் கம் ஓங்கும் - (கண்டு தொழ) பிரணவமலை விண்மேல் அளாவும்.

எ௫. பூத கங்கைக்கு (தடம்) தூய்மையாகிய வான்நதிக்கு. பூ தகு அங்கைக்கு (காந்தள்) மலரை உவமிக்கத்தக்க அங்கைக்கு நிகரும்.

எ௬. பூ வண்ணம் குலாவும் - (மண்டபங்கள்) புட்பமயமாகக் குலாவும். பூ அணங்கு உலாவும் (மாளிகைகளில்) மலர்மகள் வசிக்கும்.

எஎ. பொய்க்காது அலைத்து அடுக்கும் - (நன்னீர் மூழ்க) பொய்க்காமல் (காதகத்தைக்) கெடுத்து அடுக்கும். பொய் காதலை தடுக்கும் - (வைக) பொய்யாகிய ஆசைகளைத் தடுக்கும்.

எ௮. போதனை காலை காயும் - (தவர்) பிரமனையும் யமனையும் சீறும், போதனை * காலைக்கு ஆயும் - (மாணவர்) போதித்த நூல்களை வைகறையில் ஆராயும் *வேற்றுமைத்திரிபு.

எக. பூரி அங்கு ஊட்டும் - (அன்பர்க்கு) இசையை அங்கே ஊட்டும். பூரியம் கூட்டும் - (சேர்ந்தவர்க்கு) அரசிருக்கை (நீதி நெறியைக்) கூட்டும்.

அ௦. பூருவம் தவர்க்கு அறுக்கும் - (சாபத்துயரை) பூருவத்தில் சிவ முனிக்கு நிவர்த்திக்கும் - பூரு அம் தவர் கறுக்கும் - (மின்னார்) புருவம் அழகாகிய வில்லைக் கோபிக்கும்.

அக. புட்கரம் கடுக்கும் - (மருங்குல்) ஆகாயத்தையொக்கும். புட்கு அரங்கு அடுக்கும் - (குழல்) வண்டுகளுக்கு இருக்கையாய் அடுக்கும்.

அஉ. போக போக்கியம் கொடுக்கும் - (அன்பர்க்கு) (அருளுடன்) போக போக்கியங்களைக் கொடுக்கும். போகப் போக்கி அங்கு ஒடுக்கும் - (யோகர்க்கு மருள்) போம்படி நீக்கி ஒடுக்கும்.

அ௩. பூவாய் கொழுநனை ஏய் - (மலர்க்கா) பூதேவிக்கு வாய்த்த நாயகனை ஒவ்வும். பூ வாய் கொழு நனை ஏய் - (அளகம்) பொலிவு வாய்ந்த செழும் பூவரும்புகளை அணியும்.

அச. புல் அகண்டம் - (சிற்றறிவை) பொருந்திய பேரறிவு ஆக்கும் - புல்லகண்டம் (மள்ளர் ஆலையிரதத்தை) சர்க்கரை ஆக்கும்.

அ௫. வெற்பு கலைக்கின்ற - (தனம்) மலைகளை மாறுபடுத்துகின்ற. எல்புக்கு அலைக்கின்ற - (மாளிகை) சூரியனை ஊடுருவி யலைக்கின்ற.

அ௬. வில் உமிழ் அம் புஞ்சத்து உருவை இகல் - (புயம்) ஒளிவிடுகின்ற அழகாகிய திரட்சி வடிவை மாறுகொள்ளும். (வில்லுமிழ் அம்பும்) சத்துருவை இகல் - வில்லிலெய்யும் பாணம் பகைவரைப் பொரும்.

அ௭. புல் நைவளம் அடுக்கும் - (அளி) புல்லிய நைவளம் என்னும் பண்ணைப்பாடும். (புன்னை) வளம் மடுக்கும் - புன்னைமரம் செழுமை கொள்ளும்.

அ௮. போதம் துவைக்கும் - (மனை) வேதஞானம் கோஷிக்கும். போதந்து வைக்கும் - (உம்பர் எவையும்) கொணர்ந்து வைக்கும்.

அ௯. பூ மிக்கு அணி செய்யும் (நந்தவனம்) மலமிகுந்து அழகுசெய்யும். பூமிக்கு அணிசெய்யும் - (நிலைத்தேர்) பூதலத்திற்கு அலங்காரம் செய்யும்.

௯௦. பூம் பாவைக்கு ஊட்டும் - (அடிசில்செய்பவர்) பொலிவுள்ள பிரதிமைக்கு உண்பிக்கும். பூம் பாவை கூட்டும் - (நாவலர்) சித்திரக்கவிகளையியற்றும்.

௯க. புங்கவரை ஆக்க வரும் - (அன்பில்) தேவரைப் பெருகச்செய்யவரும். புங்கம் வரையா கவரும் - (தாரகத்தை) உயர்ச்சியுள்ள மலையாக உள்ளுணரும்.

௯உ. பூகம் தரம் கோங்கம் (சுந்தரத்தை) கமுகும் கூட்டமாகிய கோங்கரும்பும் - பூகதர் அங்கு ஓங்க - (பொன்னை) புகழ்வோர் ஓங்கும்படி நல்கும்.

௯௩. பொன் போதிகை ஓவாத - (தூண்) பொன்னாலாகிய போதிகை நீங்காத. பொற்போது * இகை ஓவாத - (கரமணிப் பொற்போது) கையாகிய அணிப்பொன் மலரானது கொடை ஒழியாத. * ஈகை - இகை யெனக் குறுகியது.

௯௪. புன்காலி கான் தழைக்கும் - (மாலின்) காயாமரம் கானில் தழைக்கும். புன் காலி கான்று அழைக்கும். (கன்றை) தலையீற்றுப் பசுக்கள் (பால்) சொரிந்து அழைக்கும்.

௯௫. போல் திருக்கு - (கயல்) போலும் கண்கள். போற்று இருக்கு (அந்தணர் வாய்) போற்றுகின்ற வேதம் நீடும்.

௯௬. போந்து இல் கலிக்கும் - (மணம் பெருக) வந்து வீடுகள்தோறு முழங்கும். போந்தில் கலிக்கும் - (அன்றில்) பனைமேல் கூவும்.

௯௭. போர்த்து அலைக்கண் ஆடும் (வாரிசம் - மேல்) மறைத்து அலையினிடத்து ஆடும். போர்த்தலை கண் நாடும் - (ஆடவர் மேல்)-போரினிடத்தில் கண்கள் தாவும்.

௯௮. மாலை போதுள் கவரும் - (சரகம் - தேனீ) மாலைமலர்களில் (தேனை) கிரகிக்கும். மாலைப்போது உட்க வரும் - (காதலர்) மாலைக்காலம் அஞ்சுமாறு வரும்.

௯௯. புத்து அகம் - மலர்ந்திடும் - (மாவளம்) புதுமையான மனைகளில் பெருகும். புத்தகம் அலர்ந்திடும் - (சங்கம்) நூல்கள் - பொருள் விரித்திடும்.

௧௦௦. புத்தி ரஸம் பத்தி வரும் (வலஞ்செய்ய) புத்தி இனிமையும் பக்தியும் வரும். புத்திர ஸம்பத்து இவரும் - (விரதம் போற்ற) மக்கட்பேற்றின் செல்வம் வளரும்.

உ

முருகன் துணை

# திருப்போரூர்

# ஸ்ரீ கந்தர் சிந்து



அஷ்டாவதானம் - சபாபதி முதலியார்,

புரசை, சென்னை.

உ

முருகன் துணை

# திருப்போரூர்

# ஸ்ரீ கந்தர் சிந்து

பூம்பொழில் சூழுந்திருப் போரூர் வளநகரில்
வேம்படி விக்னேசுரர்—செம்பொன்
மென்பதம் பணிவாய் நெஞ்சே. க

அஷ்டசித் தியுந்தரும் ஆறுமுக னூர்போரூர்
இஷ்டசித்தி ஐங்கரனை—வந்தித்
திறைஞ்சிப் பணிவாய் நெஞ்சே. உ

மணமார்ம லர்ச்சோலை மருவும் சமரபுரிக்
கணநாதர் பொற்பாதத்தைக்—கண்டு
களிப்பாய்ப் பணிவாய் நெஞ்சே. ௩

யோதிவளர் பிரணவ கிரியில் மருவுமெங்கள்
தியாககயி லாசர்பதம்—தன்னைத்
தினமும் பணிவாய் நெஞ்சே. ௪

சம்போ சதாசிவ சங்கர மஹாதேவ
அம்பா சமேதா வென்று—கந்தன்
அத்தனைப் பணிவாய் நெஞ்சே. ரு

நீலாம் பரசிகரம் நிலவும்பி ரணவகிரி
பாலாம்பி கைகெவுரி—அம்மை
பாதம் பணிவாய் நெஞ்சே. சு

ஆதார மானகழு காகி யிருவர்தொழும்
வேதாத்ரி யீசர்பத—கஞ்சம்
வேண்டிப் பணிவாய் நெஞ்சே. எ

குமுத மலர்வயல்கள் குலவும் திருக்கச்சூர்
அமுதத் தியாகராருள்—சிந்தித்
தநுதினம் பணிவாய் நெஞ்சே. அ

எங்கள் மனமலரில் இறைவி யுடனிருக்கும்
செங்கண்மா லீசுரனைக்—கண்டு
தெளிந்து பணிவாய் நெஞ்சே. கூ

அடலா ரனந்தன்மிசை யறிதுயில் கொள்ளுந்திருக்
கடன்மலை மாதவனார்—பொன்னங்
கழலைப் பணிவாய் நெஞ்சே. க0

நிருபர் புகழுமெங்கள் நித்யகலி யாணரெனும்
திருவிட வெந்தைபிரான்—அன்பர்
திருத்தாள் பணிவாய் நெஞ்சே. கக

ஞானசம் பந்தர்திரு நாவுக்க ரசர்சிவ
மானசுந் தரமூர்த்தி—எங்கள்
வாதவூரர் பாதந்துணை. கஉ

அகஸ்தியர் நற்கீரர் அருணகி ரிப்புனிதர்
மகத்வ அடியவரே—தஞ்சம்
வாழ்த்திப் பணிவாய் நெஞ்சே. கந

ஸ்ரீதா ரணிபுகழும் சிதம்பர தேசிகனார்
பாதார விந்தமலர்—என்றும்
பரிந்து பணிவாய் நெஞ்சே. கச

தன்னருட் பயனிதென்று சண்முக சுவாமிபோரூர்ச்
சந்நிதி முறைத்தமிழைச்—சென்னி
தாழ்ந்து பணிவாய் நெஞ்சே. கரு

நூல்

மூவர் புகழ்வடிவேல் முத்துக் குமரகுரு
தேவன் சமரபுரிக்—கந்தன்
சீர்பாதம் போற்று நெஞ்சே. கசு

வேதாக மப்பொருளாய் விளங்கும் சமரபுரி
நாதாந மாவென்று—கந்தன்
நற்பதத்தைப் போற்று நெஞ்சே. கஎ

பாராதி யண்டமெல்லாம் படைத்துத் துடைத்தளிக்கும்
சீரார் சமரபுரிக்—கந்தன்
சேவடியைப் போற்று நெஞ்சே. கஅ

வள்ளி தெய்வானை மகிழ் வெழுந்து பச்சைப்
புள்ளிமயி லேறிவரும்—கந்தன்
பொற்பதத்தைப் போற்று நெஞ்சே. ௧௯

தியாககயி லாசர்அருள் சேயன் சமரபுரி
யோகன் திருச்செந்தூர்க்—கந்தன்
உபயபதம் போற்று நெஞ்சே. ௨0

தேவேந்தி ரன்தனக்குச் செல்வப் பதவிதந்தான்
பூவேந்தர் சூழ்போரூர்க்—கந்தன்
பொன்னடியைப் போற்று நெஞ்சே. ௨௧

பாரோர் பணியுமெங்கள் பார்வதி யார்குமரன்
போரூர் விளங்கவரும்—கந்தன்
பூங்கழலைப் போற்று நெஞ்சே. ௨௨

அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாகத்
தங்கும் சமரபுரிக்—கந்தன்
தாளிணையைப் போற்று நெஞ்சே. ௨௩

வேதாக மப்பவுரி வீசுங் களாசநிலை
ஆதார மாமகுடம்—கந்தன்
அருள்வடிவைப் போற்று நெஞ்சே. ௨௪

எங்கள்தெய்வம் எங்கள்தெய்வம் என்றசம யங்கள்தொறும்
தங்கள்தெய்வ மாகிநிற்கும்—கந்தன்
தன்னருளைப் போற்று நெஞ்சே. ௨௫

எழில்கொண்டா வினன்குடி ஏரகங்குன் று தோறாடல்
பழமுதிர் சோலைமலைக்—கந்தன்
பதியைஎண்ணி வாழ்வாய் நெஞ்சே. ௨௬

மாதாபிதா குருதெய்வம் உறவு நட்புமுதல்
ஏதேதோ சம்பத்தெல்லாம்—கந்தன்
என்றவனைப் போற்று நெஞ்சே. ௨௭

சனகாதி யர்க்கருளும் தக்ஷிணா மூர்த்திபதம்
நினைவினில் வைத்துப்போரூர்க்—கந்தன்
நிச்சயத்தைப் பற்று நெஞ்சே. ௨௮

பார்வதியைக் கலியாணம் பண்ணி இமயமலைச்
சாரல் சரவணத்தில்—கந்தன்
தன்னைச் சிவனளித்தான். ௨௯

அன்றுசூ ரனைவெல்ல அரனார்நெற் றிக்கண்ணினில்
நின்று முதயமான—கந்தன்
நேயமற வாதே நெஞ்சே. ௩0

ஆறுமுகம் பன்னிரண் டம்புயம் விளங்கவுமை
மார்பிலே டுத்தணைக்கும்—கந்தன்
வண்மைதனை யுன்னு நெஞ்சே. ௩௧

விருத்தி யுலகம்பெற மெல்லிய ரறுவரான
கிருத்திகை முலைப்பாலுண்ட—கந்தன்
கீர்த்தியை யேத்து நெஞ்சே. ௩௨

மீனுய்ச் சரவணத்தில் மேவும் பராசரன்சேய்
ஆனோர்சா பந்தொலைத்த—கந்தன்
அற்புதத்தைப் போற்று நெஞ்சே. ௩௩

தூயதிரு மால்மகள் சுந்தரி அமுதவல்லி
மேயத வம்பலிக்க—கந்தன்
வெளிவந் தருள்புரிந்தான். ௩௪

பிரணவப் பொருள்சொல்லென்று பிரமன் வலியடக்கும்
சரவண பவன்போரூர்க்—கந்தன்
தன்னடியை வாழ்த்து நெஞ்சே. ௩௫

நெடிய பரமனுக்கும் நிஷ்கள உமைதனக்கும்
நடுவி லிருக்கும்போரூர்க்—கந்தன்
நற்றாளைப் பற்று நெஞ்சே. ௩௬

பூத கணங்கள்வீரர் போற்ற மனோரதத்தில்
மேதினி மீதுவந்த—கந்தன்
மெய்ம்மையை யுணர்வாய் நெஞ்சே. ௩௭

தாருகா சுரன்தன்னைச் சார்ந்தகிர வுஞ்சனுடன்
வேர்களைந் தருள்செய்த—கந்தன்
வெற்றியைப் படிப்பாய் நெஞ்சே. ௩௮

மண்ணி நதிக்கரையில் வந்து சேய்ஞலூரில்
அண்ணல்தனைப் பூசைசெய்த—கந்தன்
அன்பின்வண்மை போற்று நெஞ்சே. ௩௯

மருவும் பராசரன் தன் மைந்தர்க் கருள்புரிய
வருவான் பரங்குன்றினில்—கந்தன்
மலரடியைப் போற்று நெஞ்சே. ௪௰

பரங்கிரி மேவிப் பராசரன் மைந்தரொடு
திருந்துசெந் தூர்வந்த—கந்தன்
சித்துருவைச் சேவி நெஞ்சே. ௪௧

ஓதச்செந் தூரிலிருந் தோங்கும்வீர வாகுவைத்
தூதா யனுப்பிப்பின்பு—கந்தன்
சூரசம் ஹாரம் செய்தான். ௪௨

வீறான சூரனெதிர் விசுவசொ ரூபங்கொண்டு
பேறான சேவைதந்தான்—கந்தன்
பெருமையை அளப்பவர் யார். ௪௩

சூருட லிரண்டுகூறும் தோகையும்சே வலுமாக
ஊர்தியுங் கொடியுமென்று—கந்தன்
உவந்து கடல் கடந்தான். ௪௪

ஐராவதம் வளர்த்த அம்மைதெய்வ யானையைக்
கைலைபோல் பரங்கிரியில்—கந்தன்
கல்யாணம் செய்து வந்தான். ௪௫

கூறிய திருத்தென்பரங் குன்றினி லிருந்துநவ
வீரர்கள் பரவச்சென்று—கந்தன்
விண்ணோர் குடியேற்றினான். ௪௬

வீரவா குமுதலாம் வீரர்முசு குந்தனுக்கு
வீறும்ப டைத்துணையாய்க்—கந்தன்
விரதபல னாலே வந்தான். ௪௭

இந்த்ரனுக் குதவிமுசு குந்தன் திருவாரூரில்
விந்தைத்தியா கரைப்பெற்று—கந்தன்
விரதத்தினா லேயமைத்தான். ௪௮

லக்ஷத்தொன் பதுபேரும் நேரிட்ட சாபம்நீங்கிப்
பக்ஷமுடன் கந்தகிரிக்—கந்தன்
பக்கத்தில் மீண்டு வந்தான். ௪௯

மானே மலரணங்கே மாதரசே அன்னமே
தேனே பாகேயென்று—கந்தன்
சேர வருவானடி. ருo

வேங்கை மரமுமானான் விருத்தசந் நியாசியானான்
பாங்கில் வருகவென்பான்—கந்தன்
பக்ஷத்தை யாரறிவார். ருக

கன்னல் மொழியேயென்று காலில் நமஸ்கரிப்பான்
மின்னார் வடிவேற்போரூர்க்—கந்தன்
விரதம் தவறலாமோ. ருஉ

வேடனைப் போல்வருவான் வேங்கை மரம்போல்நிற்பான்
நாடறிந் தால்ஏச்சு—கந்தன்
ஞாயம்அவ னுக்கேயொப்பு. ருங

மண்ணைத் தொகைசெய்தாலும் மாயையைக் கரைகண்டாலும்
விண்ணை முழமிட்டாலும்—கந்தன்
ந்தையை யளக்கொண்ணாது. ருச

ம தினமாவும து த துகக
தானே புசித்திடுவான்—கந்தன்
சாதனத்தை நானறியேன். ருரு

தாகந் தணியமாதே தண்ணீ ரிருக்குமிடம்
நீவந்து காட்டென்கிறான்—கந்தன்
நீதியையா ரோடேசொல்ல. ருசு

அந்த மலைச்சார லடுத்த சுனைக்கருகில்
வந்த வளவிலென்னைக்—கந்தன்
வசப்படுத்திக் கொண்டானடி. ருஎ

ஆண்டவனே யிங்கெதிர்த்த யானைப் பயந்தவிர்த்தால்
வேண்டிய படிசெய்குவேன்—கந்தன்
மேலானை நம்புமையா. ருஅ

காட்டானை ஏதோவொன்று கடுகி வரப்பயந்தேன்
ஓட்டாண்டி போலேவந்த—கந்தன்
உபாயம் புரிந்தானடி. ருகூ

துங்க மலைச்சுனையில் தொடர்ந்து நெருங்கையிலே
அங்கொரு யானைவரக்—கந்தன்
ஆபத்தை யொழித்தானடி. சுo

அஞ்செழுத்தும் பாவனையும் அவனே நீயாவாய்
வஞ்சியிங்கே சற்றேயிரு—கந்தன்
மலைப்பெண் இதோ வருவாள். சுக

மூட்டிய கோடைவெய்யில் முதிர்ச்சியி னல்மெலிந்த
வாட்டந் தணியப்போரூர்க்—கந்தன்
மலையருவி மூழ்கி வந்தேன். சுஉ

தண்ணீர் பொருட்டுமலைச் சாரலில் போகையிலே
தெண்ணீர் வயற்போரூர்க்—கந்தன்
சேவை கொடுத்தானடி. சுரு

மாறுவேஷங் கொண்டுதானே மயக்கியுன்னைச் சேரவேணும்
ஆறுமுகத் தோடேவந்து—கந்தன்
அணைந்து மகிழ்ந்தானோ தோ. சுச

வந்துமுத் தாடுவான் வண்ணங்கள் பாடுவான்
குந்தி முகந்துடைப்பான்—கந்தன்
குத்திரத்தை யென்ன சொல்ல. சுரு

சித்திரம்சித் திரமாகச் செய்வான் அநந்தவிதம்
இத்தனையு மென்னத்துக்கோ—கந்தன்
எத்து வித்தை செய்கிறானே. சுசு

காதமில்லை தூரமில்லை கண்மூடிக் கண்திறக்கும்
போதேஇங் கேவருவேன்—கந்தன்
போரூர் மலை யணங்கே. சுஎ

என்னூரும் உன்னூரும் இமையும் விழியும்போலே
இன்னே வருவேனென்று—கந்தன்
ஏமாற்றிப் போனானடி. சுஅ

அடிமைவர வோஅல்ல தவனே வருவானோ
திடமாம் திருத்தண்போரூர்க்—கந்தன்
சித்தத்தை யறிந்துவாடி. சுகூ

வருவான் வருவானென்று மனதைத்தேற் றுவதல்லால்
மருவார் குழல்மாதரார்—கந்தன்
வந்தானென் பாரில்லையே. எ0

வீட்டாரெல் லாம்அறிய மேலேசந் திரன்எறிக்க
கோட்டான் குழறுவது—கந்தன்
கூடல் தடையாகுமே. எக

வருணன் கடலொலிக்க மதியனல் போல்ஜொலிக்க
இரவுப் பொழுதாகியும்—கந்தன்
இன்னம்வரக் காண்கிலனே. எஉ

காமத் தணலுருக்கக் காதல் மிகப்பெருக்க
ஜாமக்கோ ழிகூவியும்—கந்தன்
சாடையிங்கு காண்கிலேயே. எந

சூரியனு தயங்கண்டால் சோபம் தணியும்அது
ஆரியன்செவ் வேள்போரூர்க்—கந்தன்
அற்புத வடிவல்லவோ. எச

தென்றல்புலி போல்தாவச் சித்தசன் கணைகள் தூவ
அன்றி லினங்கள் கூவக்—கந்தன்
ஆசை தலைக்கேறுதே. எரு

வேலனை நினைக்குந்தோறும் வெய்ய மனதுருகிச்
சாலவு மயல்மீறுதே—கந்தன்
தன்னருளி தென்ன மின்னே. எசு

கான அருவியாறு கரடி புலிகள்சிங்கம்
யானை முதலாயுண்டு—கந்தன்
இரவில் வரலரிது. எஎ

சூரர மகளீர்கள் துஷ்டத் தனமுடையோர்
சாரும் வனத்திரவில்—கந்தன்
தனித்து வரக்கூடுமோ. எஅ

கண்ணும் நுழையாத காடு பரந்தவழி
தன்னந்த னியேபோரூர்க்—கந்தன்
தான்வருதல் அஞ்சுகின்றேன். எகூ

யாரை மறந்திட்டாலும் எதனைத் துறந்திட்டாலும்
தாரணி சமரபுரிக்—கந்தன்
தன்னைமறப் பனோமானே. அ0

அத்தன் முருகனென்று யாரேனுஞ் சொன்னளவில்
சித்த முருகுவதே—கந்தன்
சித்திரமி தென்ன பெண்ணே. அக

மன்னு மலரணையில் வந்து கலந்துநேற்று
என்னென்ன விதமோலீலை—கந்தன்
இன்பமுடன் செய்தானடி. அஉ

வந்து கலந்திருந்து மகிழ்ந்துசிந் துகள்பாடி
விந்தைய னந்தம்செய்தான்—கந்தன்
வேடிக்கையை என்ன சொல்வேன். அ௩

கட்டி யணைத்திடுவான் கலவி தொடுத்திடுவான்
இஷ்டமு டனேபோரூர்க்—கந்தன்
ஏதேதோ செய்வானடி. அச

பாங்கி தினைமுதிர்ந்த பக்குவந் தெரிந்துகொள்ள
வேங்கை மலர்ந்திட்டாலும்—கந்தன்
விட்டுப் பிரிவானோதான். அ௫

கெண்டை விழியைவீட்டிற் கொண்டுபோ வாரென்று
அண்டைவே லியில்நிற்கும்—கந்தன்
அறிய வுரைத்திடுவாள். அசூ

தேனார் புனத்தைவிட்டுச் சீறார் புகுந்தாளென்று
மானே பசுங்கிளியே—கந்தன்
வந்தால் தெரிவியுங்கள். அஎ

சொல்லாதும் சொல்லியென்னைச் சுகித்துக் கலந்திருந்தான்
புல்லாட வனேவிட்டுக்—கந்தன்
போனஇடம் எங்கே சொல்வாய். அஅ

சீரார் குழல்மடந்தை சிற்றிடைநை வதுகண்டிவ்
ஊரார் சொலுங்குறிப்பைக்—கந்தன்
உள்ளுணர்ந்து கொள்ளானோதான். அகூ

பெற்றவர் அறிந்தாலிந்தப் பேதைமைக்கென் னதான்சொல்[வேன்
முற்றும் உணர்ந்தபோரூர்க்—கந்தன்
மூதூர் வரலாகுமோ. கூ0

கொடிமா மலர்க்குழலைக் கூட்டி யனுப்பாவிட்டால்
மடலேறுவே னென்றான்—கந்தன்
வார்த்தையுல குக்கேற்குமோ. கூக

அந்திப்போ தாகுமுன்னே ஆதித்த னேகுமுன்னே
சந்தித்து நீயேயினிக்—கந்தன்
தன்னை யழைத்துவாடி. கூஉ

முள்ளிச் சுரத்திலிது மொய்குழலாள் மெல்லடியாம்
கள்ளத் தனம்புரிந்த—கந்தன்
காலடிச் சுவடதுவே. கூ௩

தீப மெனஎரியும் தீவிழியு டனேபாய்ந்த
காய்புலியை மாய்த்துவைவேற்—கந்தன்
கண்ட இடமிதுவே. ௯௪

காய்சினவீ ரர்திறத்தைக் கல்லி லெழுதிவைத்த
வாசகங்கண் டன்னுடன்—கந்தன்
மகிழ்ந்த இடமிதுவே. ௯௫

நிலவேயுன் னைத்தொழுத நேர்மையை யறிந்தடங்கு
மலைபோன்ற யானைபயம்—கந்தன்
மாற்றிமுன் னளி லளித்தான். ௯௬

கட்டினதே னைப்பிடிக்குக் களிறு தரும்சிலம்பா
பொற்றொடி மனங்கனியக்—கந்தன்
போலேவந்த நீயே சொல்லு. ௯௭

காரிருளு டனேமேகம் கவிந்து வழிகள் தடு
மாறிய துமதூரினில்—கந்தன்
வந்தேன் விருந்தாளியாய். ௯௮

மங்கை வருந்துவதேன் என்றோர் வசனங்கேளீர்.
பொங்கும் குருகினங்காள்—கந்தன்
போரூர் மலர்ச்சோலைகாள். ௯௯

இன்ன கிழமையினுல் என்ன பலனுண்டற்ற
பொன்னூசல் கோத்துத்தந்தான்—கந்தன்
போன்றொ ருருவ னுண்டு. ௧௦௦

அன்றுவள் ளியம்மையை யாவருங் கடைத்தேறத்
தென் தணிகை வந்துபோரூர்க்—கந்தன்
திருமணம் புரிந்து வந்தான். ௧௦௧

சிவபாத விதயருக்கும் தேவி பகவதிக்கும்
தவமே யுருவமாகக்—கந்தன்
சார்ந்து குறைகள் தீர்த்தான். ௧௦௨

நாடரும் உமாபதியை ஞானப்பா லையருந்தித்
தோடுடைய செவியனென்று—கந்தன்
சுட்டியறி வித்தா னடி. ௧௦௩

மூலமாங்கோ லக்காவினில் மூன்று வயதுபிள்ளை
போலே சிவனைப்பாடிக்—கந்தன்
பொற்றாளம் பெற்று வந்தான். ௧௦௪

முத்துச் சிவிகைசின்னம் முத்துக் குடையுமையாள்
அத்தன் அரத்துறையில்—கந்தன்
அன்பாக வாங்கி வந்தான். கoரு

பாச்சிலாச் சிரமந்தன்னில் பார்த்திபன் மகளைப்பற்றும்
நீச்ச முயலகனைக்—கந்தன்
நீக்கி யநுக்கிர கித்தான். கoசு

பட்டீச்சரத்தில் முத்துப் பந்தல்கொண் டுமருகல்
செட்டிப்பிள் ளைபிழைக்கக்—கந்தன்
தீர்த்தான் விஷத்தை முன்னாள். கoஎ

மங்கையர்க் கரசியென்றும் வளவர்கோன் பாவையென்றும்
பங்கயச் செல்வியென்றும்—கந்தன்
பாண்டிமாதே வியைப்ப ணித்தான். கoஅ

கொற்றவன் தனக்குமந்திரி குலச்சிறை யென்றுகூடல்
தற்பரன்ப திகந்தன்னில்—கந்தன்
சாற்றித்த னிப்புகழ்ந் தான். கoகூ

மீனாட்சி சுந்தரேசர் மெய்த்திருநீற் றுமகிமை
மேனாள்எவ ரும்அறியக்—கந்தன்
வேதத் தமிழுரைத் தான். ககo

வேண்டியே சமணரிட்ட வெந்தழ லொழிந்துபற்றப்
பாண்டியன் சுரத்தைத்தீர்த்த—கந்தன்
பதிகம்அன விட்டெ டுத்தான். ககக

வாழ்கஅந் தணரென்று வகுத்த பதிகம்பாடி
மாழ்கிச்சம ணர்கலங்கக்—கந்தன்
வையையாற்றி விட்டெ டுத்தான். ககஉ

உமையும் சிவனுமல்லால் ஒன்றும்வே றில்லையென்று
சமணரை வாதில்வென்று—கந்தன்
சைவத்தை நிலைநாட் டினான். ககங

வரங்கொள்அப் பருடனே வந்து மறைக்காட்டினில்
திறந்தகத வம்அடைக்கக்—கந்தன்
தேவாரம் பாடினானும். ககச

சத்தியும் சிவமுமான தற்பரன்தன் னையிகழ்ந்த
புத்தன் தலையிலிடி—கந்தன்
பொருக்கென விழக்கண் டனன். ககரு

காண்பவன்காட் சிப்பொருளும் கண்ணுதலே யென்றறிய
ஆண்பனையைப் பெண்பனையாய்க்—கந்தன்
ஆக்கிய அதிசயம் பார். ககசு

கச்சிதனிற் சுந்தரர்க்குக் கண்கொடுத்த ஏகம்பரை
மெச்சிப் பதிகம்சொன்ன—கந்தன்
வித்தகம் நமக்குத் துணை. ககஎ

திருவொற்றி யூரில்வந்து திருக்காளத் தியைப்பாடி
மருவும் மயிலாபுரிக்—கந்தன்
வந்தஅற்பு தங்கே ளடி. ககஅ

சிவநேச செட்டிமகள் செத்தவ ளும்புபெண்ணைப்
பவமா சொழிந்துவரக்—கந்தன்
பாசுரம் பகர்ந்தா னடி. ககசு

பதினறு யிரங்கூட்டம் பரவ நடேசர்தில்லைச்
சிதம்பரம் தன்னில்வந்த—கந்தன்
தெய்வத்த கைமையைக் கேள். கஉ0

தில்லைத்த லமுதலாய்ச் சென்றுவே தப்பநுவல்
சொல்லிச்சீ காழிவந்து—கந்தன்
தோணியப்ப ரைப்போற் றினன். கஉக

சீகாழி வந்தபின்பு திருமணம்பு ரிந்தபோது
வாகான அக்னிவலம்—கந்தன்
வந்த செய்தி என்தரமோ. கஉஉ

உத்தர கோசமங்கைக் குபதேசஞ் செய்தபோது
புத்தகத்தை யண்ணனுடன்—கந்தன்
போட்டான்க டலிலென் பார். கஉரு

மன்னுநந் திமீனக வார்கடலி லேபிறக்கத்
தென்மதுரைப் பட்டணத்தில்—கந்தன்
செட்டிப்பிள்ளை யாகவந் தான். கஉச

பரவு மதுரைதன்னில் பகர்ந்த தமிழ்திறத்தின்
கரைகண்டு சங்கத்தார்க்குக்—கந்தன்
கலகத்தைத் தீர்த்தா னடி. கஉரு

கற்கிமுகி யபயமிடக் கானமயி லேறிவந்து
நற்கிர தேவர்க்கெதிர்—கந்தன்
நன்னணிக்க ருணைசெய் தான். கஉகூ

---

வேலுமயி லும்துணை என்றால் வினையொழியும்
வேதாளம் பேய்பசாசு சூதான சூனியங்கள்
வீம்பு பண்ணும்பகைகள் பாம்புமு தல்அண்டாது
வீணுங் கரடிபுலி கோள்நாள் இடர்செய்யாது
விஷகடி ஜெந்துவகை எவையும் எதிர்ப்படாது
வேடைசெய் யும்வியாதி கள்ஓடுந் தலைகாட்டாமல்
வெங்கால னும்அஞ்சி நெருங்காத கன்றிடுவான்
வேதைகள் படுத்தும்பஞ்ச பாதகங்க ளும்தொலைந்து
வித்தைபுத்தி சித்திவரும் புத்திரசம் பத்துவரும்
வேண்டியதெல் லாங்கிடைக்கும் ஆண்டவ னருளுண்டாகும்
மேலும்வாழ் நாள்பெருகும்—கந்தன்
விஜயங்கள் பாடு நெஞ்சே. கஉஎ

மூல நிலத்தில்அதோ முகமா இருந்துகொண்டு
முழித்துத் துயிலும்பாம்பைச் செழித்தகா லாலனலை
மூட்டி யெழுப்பியிரு மூன்று தலமுங்கண்டு
மொண்டு மதியமுதை உண்டே யசைவில்லாத
மோனத் தவத்தருள்ளம் ஆனம னக்கண்ணினில்
முன்னும் ஒளிவிளக்கு மின்னல்பந் தம்விறிசு
மூத்த கதிர்மதியாய்க் காட்டும் ஒளிகளாகி
முந்தும் இவையெல்லாம் கடந்தே யழிவிலாத
முழுப்பேரொ ளியாய்எங்கும் தழைத்தேறும் விந்துவென
முன்னுமயில் மேல்வரும்—கந்தன்
சண்முகம் துணை வருமே. கஉஅ

விமலர் குமரன்திரு மறுவை நிதங்கணிக்க
வெல்லும் பிறப்பிறப்பின் தொல்லை யணுகிடாது
வெற்றுவிஷ யங்களிலே சுற்றியபு லன்களைந்தும்
வேணபடி யேவல்கள்செய் தாணைவழி யாகநிற்கும்
மெய்க்குரு வரப்ரசாதம் பெற்றிடும் வழிதெரியும்
வேதாக மப்பொருளின் மீதான உண்மைவந்து

வேகாக்கா லின்னதென்றும் சாகாத்த லையிதென்றும்
வெளியாகும் நல்லஅருள் ஒளியாயி ருந்தமோக
வித்தக முத்தர்பரி பாகத்திலே நிலைபெறுத்தும்
வேதாந்த முங்கடந்து போதாந்த முங்கடந்த
வெற்பினில் அபிஷேகமாம்—கந்தன்
சிற்சொருபங் கண்டு கொள்வாம்.

தன்னைப் பணிந்திடவும் தன்பூசை செய்திடவும்
என்னைப் பணிக்கும்போரூர்க்—கந்தன்
எந்நாளும் வாழியவே.

எல்லாரும் நன்று யிருக்க இருவருடன்
பல்லாண்டு பல்லாண்டெங்கள்—கந்தன்
பத்ம பதம் வாழியே.

அடியன் சபாபதி அன்பிற் கிசைந்தவெற்றி
வடிவே லவன்போரூர்க்—கந்தன்
மயிலும் சேவலும் வாழி.

திருப்போரூர் ஸ்ரீ கந்தர் சிந்து

உ

முருகன் துணை

# திருப்போரூர்

ஆண்டவர்

# கீர்த்தனங்கள்

**ராகம் - அம்சத்வனி - ஆதிதாளம்**

பல்லவி

காங்கெயனூர் பூங்கழல்கள் கதியென நிதநீ துதிமதியே

அநுபல்லவி

பாங்கொடுசூழ்ந்து தினந்தொறும்எழ்
பார்புகழ் ஸ்ரீசமராபுரிவாழ் (காங்)

அல்லல்கூர்தொல்லையிலே அலையாதேநிலைகுலையாதே [வால் (காங்)
சொல்லும்பொருளுங்கண்டவர்பால் சுகம்எதுவெனஅறிவுற்றுணர்
புலனைந்தின்வழியோடிப் பொய்யிதுமெய்யிதுவெனவுணராய்
பலபலநினைவினில்ஓடாமல் பண்ணியபவமதில்வாடாமல் (காங்)
வனவேடன்மகளுடனே மகபதிமகள்மகிழ்மோகனனூர்
தனதத்தனதத்தனதாம்தாம் எனநடமிடுமயில்வாகனனூர் (காங்)
நீடுபரங்கிரிபழநீ நிகழ்செந்தூர்திருவேரகமாம்
தோடலர்குன்றுதோறுடனுடன் சோலைமலையில்வருதாரகமாம் (கா)
நற்கீரர்அருணகிரி நாதர்அகஸ்தியபூஜிதனூர்
அற்புதகஜமுகசோதரனூர் அடிமைசபாபதிசேவிதனூர் (காங்)

---

**ராகம் - செஞ்சுருட்டி - ஆதிதாளம்**

பல்லவி

ஆதரித்தெனையாண்டருள்பர - மானசுதந்திரஷடானனனே

அநுபல்லவி

வேதமெச்சியபோரிக்குட்பெரு - வித்தைப்பத்திமிகத்தருசற்குரு
நீயெனக்குத்தாய்தந்தை நினையேநாடுவதென்சிந்தை
தீயகுணத்தைப்பற்றிச்சுற்றும் - தெட்டைக்கட்டறவிட்டிடமுற்றும்
பாதகத்தைத்தள்ளாது பரமசுகத்தைக்கொள்ளாது
சூதுவாதுபண்ணிப்பண்ணிச் சொக்குமனத்தையடக்கிடஎண்ணி

சர்வஜீவகாருண்யம் தற்பரசிவசுப்பிரமண்யம்
பர்வதராஜபுத்திரிக்கற்புத பாலகுமாரமுக்திச்சித்பத (ஆதரி)
ஜோதிதாரகசிந்திதா சொல்சபாபதிவந்திதா
மாதுதெய்வயானைசுந்தர மான்மகள்கணவாநிரந்தரம் (ஆதரி)

---

ராகம் - ஹிந்துஸ்தானிகாபி - ஆதிதாளம்

புத்தியுள்ளோருக்குப் புண்ணியகதி - நல்ல
புத்தியில்லாருக்குப் பொல்லாவிதி
அத்தன் திருப்போரூர் ஐயனைப்பாடும் (புத்தி)
வள்ளிதெய்வயானை மணாளனைப்போற்றும் (புத்தி
தியாககயிலாசர் சேயனைப்பூசிக்கும் (புத்தி)
கந்தாமுருகா கடம்பாஎன்றுபணியும் (புத்தி)
மாயோன்மருகா முருகாஎனவணங்கும் (புத்தி)
அன்பன்சபாபதிக் கருள்வேலனைத்தொழும் (புத்தி)

---

ராகம் - தோடி - ரூபகதாளம்

பல்லவி

கந்தாமுருகோனே - என்னைக் - காப்பதுன்பாரம்

அநுபல்லவி

செந்தாதவிழ்நீபத்தாரா - சீரார்போரூரா (கந்தா)
மந்தாகினிசேயா - நிதம் - வாழ்த்தன்பர்சகாயா
சிந்தாகுலந்தீர்த்தாளாய் தேவர்மணாளாபன்னிருதோளா (கந்தா)
திருமால்மருகோனே - என்றும் - தெவிட்டாச்செந்தேனே
வெறுமாயைகடந்தவெளியே விண்ணின்ஒளியேதண்ணளியே (கந்)
கவுரிபாலுண்டாயே - திருக் - கையில்வேல்கொண்டாயே
சௌரியசூரன்மார்பிடந்த சம்ஹாராசிவன்குமாரா (கந்தா)
தெய்வயானைநாதா - வள்ளி - தேவிமகிழ்விநோதா
மெய்யர்க்கருள்சதாசாரா வேண்டும்சபாபதிக்காதாரா (கந்தா)

---

ராகம் - கான்டா - ஆதிதாளம்

பல்லவி

ஆடுதுபார்நின்று - தோகைமயூரம்ஒன்று

அநுபல்லவி

ஆடுதுபோரூர் ஆண்டவனைமேல்கொண் (டாடுது)

காசினியெங்கும் கலாபம்ஒளிவழங்கக்
காலில்தண்டைசதங்கை கல்கலென்றுமுழங்க (ஆடுது)
தேவவாத்தியஓசை சேர்ந்ததாளசுதியின்
ஜெஞ்ஜெஞ்ஜெகிடதக - தித்திமிதிந்திமியென் (ருடுது)
தெய்வயானைவள்ளி தேவிமாருடன்துய்ய
செவ்வேள்பவனியாரும் சேவித்தஞ்சலிசெய்ய (ஆடுது)
பக்தன்சபாபதிபாட அன்பர்கொண்டாட
பாரில்வானந்தனிலுள் ளோரானந்தக்கூத்தாட (ஆடுது)

---

ராகம் - ஹிந்துஸ்தானிகாபி - அடதாளசாப்பு

பல்லவி

கூவுதுகேள் - ஒருசேவல்இதோ - கூவுதுகேள்
சீவதயாளன் தேவர்மணாளன்
திருப்பொற்போரியிற்கந்தன் நமக்குக்கெதியென்று (கூவுது)
தோகைமயூரன் சூரசம்ஹாரன்
சுருதிக்குள்நிச்-சயித்துச்சொல்-பரத்வப்பொருளென்று(கூவுது)
ஷண்முககாமி சர்வாந்தர்யாமி
ஜெகஜீவபரா பரஜோதியென்று (கூவுது)
சமயாதீதன் சற்குருநாதன்
உமைக்கும்தற்-பரற்கும்மத்-தியில்வித்-தகனென்று (கூவுது)
பக்தர்கள்பந்த பாசமாம்அந்தப்
பருத்தறகரியகா ரிட்டுப்போய்விடியக் (கூவுது)
குஞ்சரிபாகன் குறத்திமோகன்
குறித்துப்புகல்சபா பதிக்குத்துணையென்று (கூவுது)

---

ராகம் - ஹிந்துஸ்தானிகாபி - ஆதிதாளம்

பல்லவி

தியாககயிலாசர்தநயாஉமா தேவியளித்தருள்குமாரநமா

அநுபல்லவி

வாகைசேர்கடப்பமலர்பூண்டவா
வாழ்திருப்போரூ ராண்டவா (தியாக)

உன்தாள் துணையல்லால் வேறுதாரம்
உண்டோசொல்லாய் கொண்டாங்காரம்
என்பான் தரவரு கின்றவிசாரம்
எல்லாம்தணித்தாள் வதுஉன்பாரம் (தியாக)

சிந்தா குலமெல் லாமும்தீராய்
சீரார்மயில்மேல் சேவைதாராய்
கந்தாகுமரா என்முன்வாராய்
கருணாநிதியாய்க் கடைக்கண்பாராய் (தியாக)

எதுவானாலும் உன்னைத்தானே
என்றும்பற்றாய் நம்பினேனே
மதுவார்மலரே அயில்வேலோனே
மணமேரசமே செந்தேனே (தியாக)

வேழமுகர்க்கிளவ லானசேந்தா
மேவும்தேவர் சேனைவேந்தா
வாழிசபாபதிக் கருள்வேதாந்தா
வள்ளிதெய்வ யானைகாந்தா (தியாக)

---

ராகம்-எமுனுகல்யாணி-ஆதிதாளம்

பல்லவி

ஐயாபொன் மலைநிகர்பன்னிருகையா
அருள்செய்வாய் மெய்யா (ஐயா)

தெய்வத்தகைமருவு போரிவளர்பரம
சிற்சுகாரம்ப சுப்பிரமண்யமே (ஐயா)

ஓதியளவுசொலொ ணாதசிவகாம
வேதமந்திர சொரூபாநமோநம (ஐயா)

ஆதியந்தம்அறி யாதுவளர்பரஞ்
சோதியுன்னையறிந் தோதுவதார்தரம் (ஐயா)

மாதுபாகர்தரும் நாதசபாபதி
ஓதும்வள்ளிதெய்வ யானைசுகோததி (ஐயா)

கீர்த்தனங்கள் முற்றிற்று.

உ

முருகன் துணை

திருப்போரூர் ஆதீனம்

சிதம்பர சுவாமிகள்

# பதிற்றுப்பத்தந்தாதியும்

# பரம்பரைச் சுருக்க வரலாறும்



அஷ்டாவதானம் - சபாபதி முதலியார்,

புரசை, சேன்

முருகன் துணை

## திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள்

# பதிற்றுப்பத்தந்தாதி

### வேம்படிவிநாயகர் காப்பு

பூம்படி யளக்கு நெடியமா னிகர்பூம்
பொழிற்றிருப் போரிவாய் நலனுண்
டாம்படி முளைத்த முருகவேள் கருணைக்
கணிமைகூர் சிதம்பர முனிசீர்
யாம்படித் தேத்த வைங்கர நால்வா
யருணிறை முக்கணு நிலவும்
வேம்படி நிழற்கண் வேழமா முகத்து
வித்தகர் பொற்பதம் பணிவாம்.

### நூல்

பூதலத் தென்று முன திரு மலர்த்தாள் புந்தியி விருத்திநின் புகழ்ச்சீர்
காதலித் தோதி நின்னைநா டோறுங் கைகுவித் தகநெகிழ் வுற்றுக்
கோதலைத் துயர்நீங் கிடவரு ளியநின் கொள்கையென் னுரைசெய்கேன் போரி
மாதலத் துறைசெவ் வேளருட் கிடனும் வள்ளலே சிதம்பர மணியே.

மணிநிறை யொளியு மலரது மணமும் வருபசும் பாலது சுவையும், அணியுறு மொழியின் பொருளுமென் றியாண்டு மணுகிய போரியெம் பெருமான், றணிவரு கருணை நிழற்குடி கொளுமுன் றத்துவமெவரறி கிற்பார், பணிவுறு மெளியோஞ் சிற்றறி வினதோ பகர்சிதம் பரப்பெருந் தவனே. ௨

பரமெனும் பதியும் பசுவுமை வகைய பாசமு மீதிது வென்று
சரதமுள் ளுணர்ந்த தத்துவ மூர்த்தி சகநெறி யோகவிஞ் ஞான
குரவமெய்ப் பிரண வாசலச் சாரற் குலவுபோ ரிப்பிரா னிருபொற்
சரணசே கரநின் சரண்பணி யடிமைத் தரத்தினர்க் கென்குறை யுளதே.

உளதெது மற்று மிலதெது சகல வுலகமு முயிர்த்தொகை யனைத்தும்
அளவிட வருதன் சந்நிதி விலாசத் தருள்வெளி யுற்றசைந் தாடக்

களவறி யாமை யுறைதிருப் போரிக் கந்தவேள் சரணமுன் வயமாக் கொளவரு ணிலைத்த சிதம்பர குரவ கூறுநின் றெண்டரா மவர்க்கே.

அவனவ ளதுவா மவைதொறும் பொருந்தி யாண்டரு ளுடைய நம் பரம, சிவமுதன் முளைத்த போரியெம் பிரானைச் சிற்றறி வெளிய ரேம் போற்றத், தவமிக வுளதோ வாதலா லன்ன சச்சிதா னந்தவாழ் வினையுள், ளுவகையி லுணர்ந்த சிதம்பர முனிவ வுனைத்துதி செய முயன் றனமே. ௫

முயலொரு மாசு மதியுடற் கொருபான் முற்றிலு மாசினுற் பொதிந்த, கயவனை யெடுத்தாண் டருளுநா ளுளதோ கடவுளர் முனிவர ரயன்மால், சயசய வெனநின் றேத்திடும் போரூர்ச் சண்முக வள்ளலார் பாதாம், புயமுர லளியே சிதம்பர மணியே பொறைமிகு பெருந்தவக் கொழுந்தே. ௬

கொழுந்தது வயிரங் கொள்ளுமோ வெறிய கொள்கையிற் பழகிய மனதும், அழுந்துமோ நின்பாற் போரியாண் டவர்தாட் கன்புயர் சிதம்பர குரவ, வெழுந்திடு நிற்கு மோடுமீண் டேகு மிதுநலந் தீதென வுணரா, தழுந்துரு ளளவும் பொறைகொளா மனதி னுறுவலி யடக்க லுன் பரமே. ௭

உன்பெயர் நினைக்க விராட்டுவுள் ளத்தை யுன்பதி துவாதசாந் தத்தை, யுன்குரு விருக்கை புருவமத் தியத்தை யுரைத்தவத் தேசிக ருமம், உன்பணி நிகழும் போரியாண் டவன்பே ருணர்த்துமா லவைதரு பயன்கள், உன்பர மாக வுற்றனை யதனு லுன்புக ழெவற்றினும் பெரிதே. ௮

பெரியரைத் துணைக்கொள் பெரியரைப் பிழையேல் பெரியர்த மினத்திரு வென்றென், றரியநூன் முரச மறைவது பல்கா லறிவுறக் கேட்டவற் றென்றும், புரிகுவான் றுணியேம் போரிவித் தகர்தாள் புனைதரு சிதம்பர குரவ, பிரிவிலாச் சிறியோர் பிழைபொறுத் தாளல் பெரியவர் கடனன்றோ வருளே. ௯

அருமறை யறியே மொருதவம் புரியே மறிவிலார் கூட்டம்விட் டகலேம், பெருமையை மதியேஞ் சிறுமையை யுணரேம் பிறவியங் கடலைநீந் துவமோ, திருமகள் வளர்போ ரிப்பிரான் குருவாய்த் தெரிசனை தந்தவா நீயு, மொருமையவ் வுருவாய் வந்தரு ளாயோ வுயர்ந்ம் பரதபோ நிதியே. ௧0

வேறு

நிதியே பரமார்த் தம்முஞணர் நிறையே பொறையே தென்போரிப்
பதியே மருவும் பெருமாஞர் பற்றே பற்றும் பெருவாழ்வாங்
கதியே நிலவு சிதம்பரவான் கனமே யிருளான் மறைவுபடா
மதியே நினது பதாம்புயமா மலரே யடியேம் பெறுமணியே. ௧௧

அணில்வால் தினைநீள் புனமெய்தி யங்ஙா ளெமதன் னையைநாடிக்
கணியாய் நின்றே விளையாடுங் கதிரோன் போரூர்ப் பெருமாஞர்
பணியாழ் கடனீ ராடுசிதம் பரமா முகிலைப் பரவினர்கள்
தணியா வெழுசன் மத்தின்விடாய் தணிவுற் றழியா நிலையினரே. ௧௨

நிலையுள் ளதனை நினையாமல் நிலையில் லதனை நிலையுளதென்
றலைபுல் லறிவோ ருறவினைவிட் டரசே யுனையன் பொடுபரவுந்
தலைநல் லுணர்வோ ரவைகூடில் தண்போ ரிக்கந் தனைநாடுங்
கலைவல் லசிதம் பரமுனிவர் கழலைக் கருதுந் தகைவருமே. ௧௩

தகையா தபரா நந்தநெடுஞ் சலதிக் கடலா டியபெரியோர்
வகையா தெனவுள் ளுணர்கில்லா வலியோ ரெனவே யுழல்வேனை
மிகையா வையுநீத் தருளாயோ விரிநீர் வயல்சூழ் போரூராண்
டகையா தவஞெ ரொளிவெளியுட் டங்குசி தம்பர வின்குருவே. ௧௪

இன்ப மெனச்சொ லுமதுபோரூ ரிறைவனை யேயரு மறையெல்லாந்
தன்பய னெனவோ துவதென் று சாதன மாதிக ளாலுணரும்
நின்பத பூசனை யேநாளும் நேயமு டன்செய லாமெனவுள்
ளன்பக லார்பெறு பேறுளவோ வநகசி தம்பர குணவரையே. ௧௫

வரையா துகொடுப் பவரெல்லாம் வள்ளிய ரெனுமுரை கொள்வரது
விரையா துணரின் வறிதாமால் மிகுமுணர் வானுணர் பொருளுணர்வு
நிரையா வையுநீ கைகண்டாய் நின்கைக் கொடைமுன் னதுநிகரோ
பரையார் தருபோ ரிக்குகனைப் பரவுசி தம்பர கனமுகிலே. ௧௬

முகிலை யிரந்துகை கூப்பிடலம் முகில்பரு வத்தின லாதளியா
தகில மிறைஞ்சு மெழிற்போரூ ரத்த னருட்கட லாடிமகிழ்
நிகிலக னங்கொடெ ழுந்தொருசந் நிதிமுறை பொழிநினை வாழ்த்தவுயர்
சகில முணர்ந்த சிதம்பரமா தவநனி தருவைச தாதினமே. ௧௭

தினையள வாகிய போழ்தேனுந் திருவரு ளாளர்ப தம்பணியுந்
தனையணு குறுநெறி யாததனைத் தயையுட னுரைசெய வுளநினையின்
உனையெவர் தடைசெயும் வலியர்கொலோ வுயர்வள நிறைபோ ரிப்பெருமான்
கனைகழ லடிமுடி பணிவாய்மை கருதுசி தம்பர சுகவமிர்தே. ௧௮

அமைவுறு போரித் திருநகரை அயில்வடி வேலனை அடிபரவி [கள்
இமையவர் நிலையுனு முயர்நிலைசே ரெந்தை நினைத்தொழு மிறையவர்
தமைநனி கண்டு வணங்குமுயர் தவநிதி யேயழி யாநிதியாம்
உமையருள் குகனுக் குளமலரே யுதவுசி தம்பர நிறைமதியே. ௧௯

மதன சரத்தில லென்செயும்வாண் மதிசொரி கதிர்நில வென் செயுமால், வதன மலர்க்கிணை யாருமினார் வரியுறு படைவிழி யென் செயுமால், சதன நறும்பொழில் சூழ்போரூர்ச் சண்முக னாருள் சிவஞானச், *சுதனம் வயங்கொள் சிதம்பரவான் சுடரை யுளங்கொளு மிறைவரையே. ௨௦

வேறு

வரைதொறு மாடல் செய்து மாமயி லூர்ந்து நின்வா
யுரையினி லுவந்துன் னுள்ளத் துறைதிருப் போரி யெம்மான்
விரைமல ரடிக்காட் செய்யும் விரகருள் சிதம்ப ரப்பேர்
நிரைதொடைப் பநுவல் கூர்சந் நிதிமுறைத் தமிழ்வல் லோனே.

வல்லுறழ் கொங்கை மின்னார் வலைப்படு மைய னீந்தி
யெல்லுறழ் நினது பாதத் திருங்கரை காண்ட லெந்நாள்
கொல்லுலை வேற்கண் வள்ளி குஞ்சரி மணாளற் போற்றி
நல்லுணர் வெவர்க்கு மல்க நவில்சிதம் பரக்கோ மானே. ௨௨

மானென வாட்கண் கூந்தல் மாலெனப் பயன்கொ ளாச்சொல்
தேனென வெற்றின் பத்தைத் தேடுவார் பாடு வார்க்குத்
தானென லொழிந்து போரித் தற்பரற் குருகு நீயாள்
வானெனற் கிசைவு றுதோ வளர்சிதம் பரவான் பேறே. ௨௩

பேறுனைப் போற்ற லென்று பேதையேன் புகுந்தேன் போரி
யாறுமா முகற்குத் தொண்டா யணுகுநல் வரம்பெற் றுய்வான்
ஏறுசீர்ச் சிதம்ப ரப்பே ரின்பமே யன்பே நண்பே
தேறுமுப் பழச்செந் தேனே தெவிட்டிடாச் சுவைக்கற் கண்டே. ௨௪

கண்டதுன் பெயரை நாடுங் கருத்தரை யவர்தாட் சென்னி
கொண்டதுன் மீது காதல் கூர்ந்ததிவ் வடிமை யோர்பால்
உண்டுவந் தாள னின்பா லுள்ளது போரி யெந்தை
தொண்டுணர் சிதம்ப ரப்பேர்த் தூயவான் குணப்பொற் குன்றே. ௨௫

*சுதனம் - ஆயுதப்பொது.

குன்றுபோற செல்வம் பெற்றுங் கொற்றமுங் கொடையும் பெற்றும்
நன்றுபோற் றீது மெண்ணும் நற்கதிக் கணிமை யான
நின்றுணைப் பாதப் போதை நினைகிலார்க் கென்றும் போரி
யென்றித யத்துண் மன்னு மெழிற்சிதம் பரமெய் வாழ்வே. உசு

மெய்யினைப் பொய்யென் றும்பொய் மெய்யென்று மயங்கு ருமல்
உய்யுமா றருள வேண்டி னுனக்கிய லாமை யுண்டோ
செய்யகம் பெரியோர் நூல்போற் செறிபயன் விளையும் போரி
ஐயனே அமுதை யுள்ளும் அருட்சிதம் பரத்தக் கோனே. உஎ

தக்கது தகாத தின்ன தாமென வுணர்த றேற்று
மக்களுக் குறுதி சொல்கேன் வளர்திருப் போரூ ராண்டான்
பக்கம்விட் டகலா தென்றும் பயில்சிதம் பரமு னீந்த்ரன்
றொக்கசீர் பரவி நின்றுற் றேன்றுநல் லுணர்வு தானே. உஅ

உணவினை யுடையை வேண்டி யொருகொடிப் பொழுதுஞ் சும்மாத்
தணவுறு துழைப்புற் றுலுந் தமக்கவற் றினும்வே றுண்டோ
குணனிறை சிதம்ப ரப்பொற் குன்றைவண் போரிச் செவ்வேள்
மணமலர்த் தாள கஞ்சேர் மருந்தையுட் கோட னன்றே. உகூ

கோடிகா லங்கள் வாழ்ந்து கோதையர் மக்கள் செல்வ
நீடின ரெனினும் போரி நிருமலர் தரும்பே ரின்பந்
தேடிய வாழ்க்கை நீங்காச் சிதம்பர குரவ நின்போற்
பாடிலாப் பெரியோர் தொண்டு பரிவிலார் தெரிவி லாரே. ௩0

வேறு

ஆர நீள்பொழிற் போரியம் மான்கழல்
வார நீடு சிதம்பர வள்ளலைக்
கூர வாழ்த்திக்கை கூப்பவ விச்சைவன்
பார நீங்கிநற் பண்பு பிறந்ததே. ௩க

பிறவி நோய்க்குப் பெருமருந் தாயதாற்
றுறவு நீடு சிதம்பரத் தொன்மைசால்
அறவன் வாழ்திருப் போரி யமலர்பால்
உறவு கூர்தவத் தோன்பதம் போற்றலே. ௩உ

போற்றி னேன்திருப் போரிப் பிரான்புகழ்
சாற்றி அன்னவன் தண்ணளி யால்இருள்
மாற்றி வாழுஞ் சிதம்பர வள்ளலால்
ஆற்றி னேன்மனத் தார்துயர் வேடையே. ௩௩

வேடு வப்பெரு மாட்டிதன் வேட்கையின்
ஊீடு போரிச்ச டாநகர் நீணிலை
கூடும் யோக சிதம்பரக் கொற்றவர்
ஈடு சேர்பத மென்னுண யந்ததே.

நயநம் பன்னிரண் டார்நண் ணு போரிவாய்
இயனு றுந்தவ மெய்துசி தம்பரப்
புயனெ டுங்கொடை புண்ணிய ருள்ளத்தில்
வியனு றும்பத்தி வித்தி விளைப்பதே.

விளைவு மல்கும் வியன்பணைப் போரியின்
முளைத ரும்பர மார்த்தத்தை முன்னிமால்
களைசி தம்பரக் கற்பக மன்பராங்
கிளைஞ ருக்கருள் நீழல் கிளர்ந்ததே.

கிளவி பிள்ளை கிளக்கப் பயிற்றுவார்
அளவி யன்னசொல் லான்மகிழ் வாரென
வுளமு வந்தென்சொ லுங்கொளும் போரிவேல்
இளவற் போற்று சிதம்பர எந்தையே.

எந்தை போரி யிறைகழற் காத்தமிழ்ச்
சந்த மாலை தரிக்குஞ் சிதம்பர
அந்த ணறகடி மைத்திறம் பூண்டவர்க்
கிந்த மாநிலத் தேயிணை யாவரே.

யாவ ரென்சொலி னும்மென துள்ளமா
தேவர் சேய்திருப் போரித் தினகரற்
காவல் கூர்ந்த சிதம்பர வண்ணலை
மேவ லென்றும் விடாதிது திண்ணமே.

திண்மை யாவது போரித் திவாகரன்
வண்மை யேலுஞ் சிதம்பர மாதவற்
குண்மை மெய்யன் புடைமை யுணர்வரு
நுண்மை யன்னவர் நூற்பொருட் டேர்ச்சியே.

வேறு

தேரும் வாய்மையு ஞானமு நீடுந் திறல்கொண்ட
சீருஞ் செல்வமும் வண்மையு மின்ன திருவெல்லாம்
பாரும் வானுஞ் சூழும் போரிப் பரனன்புட்
சாருந் தூய சிதம்பர தேவன் சரணன்றே.

சரதந் தருதென் போரிப் பரமர் சதாசாரத்
திரதந் தருவான் வரலும் வணங்கி யெதிர்ந்தேத்தி
வரதந் தழுவு சிதம்பர தேவை வழுத்தும்பேர்
விரதங் கொளலே பொருளென் றமைவோம் விழைவுற்றே. சஉ

உற்றது பூமிக் கெட்டுணை யும்முள் ளுணர்கில்லீர்
பெற்றதை யாயச் சிற்றள வேநீர் பெறுபேறு
முற்றிய தோசம ரப்பதி யுத்தமர் மொழிவாய்மை
கற்றசி தம்பர தேவரை நாடிக் கருதீரே. சங

தீரா செனமத் தேயுழல் கவ்வை செருக்குள்ளம்
போரா தாணவ வல்லிரு டொட்ட பிணிப்பம்மா
சீரார் போரூர் வேலனை நாடு சிதம்பரவான்
ஆரா வமுதை யகம்புற முய்த்துண ராதார்க்கே. சச

உணர்வே உயிரே உயிருள் ளொளியே உயர்வாழ்வே
யிணர்வாய் பொழிலேய் போரிப் பெருமாற் கினியோனே
புணர்வா றுறவே ஞானசி தம்பர புநிதாநின்
றுணர்வாய் பொற்று ளிணையே யடியோர் துணையாமே. சரு

ஆமைப் பொறியை யடக்கி லருந்தவ மோபேசா
வூமைக் குளதோ மோனம தைப்போ லுணர்வுற்றார்
தீமைக் குழலா தாள்க திருப்போ ரிப்பதிநீங்
காமைக் குறவு பொருந்து சிதம்பர வம்மானே. சசா

அம்மையி லெத்தவ முன்னின மற்புத மதினின்னை
யிம்மையி லோதவு மெய்தி வணங்கவு மிசைவுண்டாற்
செம்மை தருஞ்சம ரப்பதி நாதர் திருத்தொண்டே
எம்மையி னின்பமு மென்ற சிதம்பர விறையோனே. சஎ

இறைவ ரெனப்பே ரிசையின ரென்ன வெழிற்கல்வி
நிறைவ ரெனத்தவ நின்றார் நின்பா னினைவுற்றோர்
நறைவன மார்தென் போரி வருங்குக னார்நண்பிற்
பொறைவளர் போத சிதம்பர மாதவ புங்கவனே. சஅ

புங்கவர் நாயகர் போரி நெடும்பதி பொன்னுலகோ
ருங்கதி யாகவி ரும்புவ தென்றுரை யுத்தமனார்
மங்கள ஞான சிதம்பர தேசிகர் மாதவமே
யெங்களை நாளு மளித்தரு ளுந்திரு வென்பதுவே. சகூ

என்மழ லைச்சொலு மின்சொ லெனக்கொள வேயடியேன்
முன்மதி கொண்டு புரிந்த நெடுந்தவ மொய்ம்பறியேன்
கன்மன முங்குழை யச்சம ரப்பதி காதல்கொளுஞ்
சின்மய னைத்தமி ழோது சிதம்பர தேசிகனே. ருO

வேறு

தேசுலாவு தாரகாச லேசர்சேயர் போரிவாய்ப்
பூசுராதி யோருநாடு போதநீள்சி தம்பர
மாசிலாம ணிக்குவாச மாலையும்ப சுந்தமிழ்ப்
பேசுமாலை யும்புனைந்து பேணுவார்சொல் வாணரே. ருக

வாணிலாநெ டுஞ்சடைப்பு ராணர்மைந்தர் போரிதன்
காணியாக வாழ்சிதம்ப ரப்பெயர்க்க லாதரன்
ஏணிலாவு பாதபூச னைக்கிசைந்த வுள்ளமே
கோணிலாவ வித்தையான குன்றினைக்க டந்ததே. ருஉ

கடல்சுலாவு மண்ணும்விண்ணு மோர்குடைக்க ணுகவே
அடல்குலாவ வாளினுஞ்சி தம்பரத்த யாகரா
மடல்குலாவு தாழைநீடு போரிவாழ்வின் மன்னுவாய்
உடல்குலாவும் ஆவியென்ன உறுதிபற்றி உய்யுமே. ருந

உய்யஆசை கொண்டதற் குளுற்றிடாது பாவமே
செய்யஆர்வம் நீடிலென்ன செம்மைபெற்று வாழ்துமால்
ஐயபோரி அண்ணலுக்குள் அன்பமைந்த மாதவங்
கையறாது கூர்சிதம்ப ரத்தனிக்க ருத்தனே. ருச

கருந்திரைப்ப டங்கொள்பூ மிசைக்களித்த கட்டினுக்
கருந்தருந் தெனத்துறுத்து மாவதென்ன நின்பெயர்
விருந்தருந்தல் கூடில்யாவும் மேவுமால்சி தம்பரப்
பெருந்தவத்தி னேசபோரி யானருட்பிர சாதமே. ருரு

சாதனம்ப யின்றிலேன் தவத்தினின்று யர்ந்திலேன்
ஓதனம்பொ ளுடையுண்டு சேர்த்துடுக்க உன்னினேன்
ஆதனத்தன் உள்ளமென்று போரியாண்ட வன்கொளும்
மாதனம்பெ றுஞ்சிதம்ப ரப்பிரபோத வள்ளலே. ருசு

வள்ளிதெய்வ யானையார் மணாளன்நீடு போரியுள்
வெள்ளிமால்வி டைத்தியாக கைலைநாதர் மெய்யனை
உள்ளியுள்ளி யத்தவத்தில் ஓங்கிவாழ்சி தம்பரத்
தெள்ளுமா மணிக்கென்நெஞ்சு சேர்ந்துகாதல் கூர்ந்ததே. ருஎ

கூரயிற்க ரங்கொடக் குறும்புசூர் தடிந்துவிண்
ணோரயில்வு றுஞ்சுகத் துறுத்துபோரி நாதர்தாள்
சேரயிக்கி யம்பெறுஞ் சிதம்பரச்சி ரோமணி
காரயிற்கண் மாதர்மையல் கட்டறுக்க வல்லதே. ருஅ

வல்லடுத்த கொங்கைபாகர் மைந்தர்போரி வாழ்வுறாஉம்
சொல்லடுத்த மாதவச்சி தம்பரச்செ ழுஞ்சுடர்
கல்லடுத்த என்மனங் குழைந்திடக்க திர்த்துநீ
டல்லடுத்த தீதெலா மகற்றியங்கு தித்ததே. ருக

உதிக்கும்வா ணிலாவளர்ந் துடன்குறைந்து தேயுமால்
கதிக்கும்வேலர் போரிவாழ்சி தம்பரக்க லாநிதி
பதிக்குஞான மானதண்மை பற்றுநர்க்க ளித்துளே
மதிக்குமாறு வளர்தல்தேய்தல் வாடலின்றி நீடுமே. கூ0

வேறு

நீடிய போரியி னூடுசி தம்பரப்
பீடுடை யார்பத நாடுநர் நல்லரே. கூக

நல்லசி தம்பரச் செல்வர்பெ ருந்துணை
புல்லுநர் போரிவேல் வல்லவன் அன்பரே. கூஉ

அன்பரை யாள்பதி யென்பர்சி தம்பர
மன்புகழ் வேலவர் பொன்பயில் போரியே. கூங

போரி அரன்கழல் சார்மின்ஒ ருங்கருள்
வாரி சிதம்பர ஆரிய னைக்கொடே. கூச

கொடியது யர்க்கடல் வடியஉ ளத்திடை
முடிவில்சி தம்பர அடிகளி ருந்ததே. கூரு

இருந்தருள் போரி வருங்குக னன்பு
பொருந்து சிதம்பர அருந்தவர் கோவே. கூசா

கோத்தணி சொற்றொடை சாத்தி வணங்குதும்
ஏத்துசி தம்பர ஆத்தனை அன்பினே. கூஎ

அன்றென வின்றெனச் சென்றொழி யாதுநின்
நன்று சிதம்பர வன்திற லானையே. கூஅ

ஆனைமு கற்கிளை யோனுறை போரியுள்
ஞானசி தம்பர மோனியை வாழ்த்துமே. கூகூ

வாழ்குகன் போரியைச் சூழ்மின் சிதம்பர
ஆழியை நாடுமின் ஊழ்வலி யோடுமே. ௭0

வேறு

ஓடியெங்கு மொண்பொருள் தேடிஞுந்தி ருந்துமோ
கேடில்சீர்ச் சிதம்பரற் பாடிடார்ப யன்களே. ௭௧

பயன்செய்போரி நம்பரன் வயம்பெறுஞ்சி தம்பரச்
சயந்தரன்தி ருப்பணிக் கியன்றநண்ப தினியதே. ௭௨

இனியபோரி எந்தைபாற் கனிவுகூர்சி தம்பரப்
புனிதரைப்ப ராவுவோர் துனியுறாத தூயரே. ௭௩

தூவியன்ன மார்வயன் மேவுபோரி யண்ணலார்
ஏவல்கூர்சி தம்பரத் தேவன்எங்கள் தெய்வமே. ௭௪

தெய்வமீன்றோர் தேசிகன் செய்வளங்கொள் போரிவாழ்
மெய்யன்ஆள்சி தம்பரத் துய்யஞான சோதியே. ௭௫

ஞானவா ளெனத்தமர்க் கூனவன்ப கைத்தெறூஉ
மானமார்சி தம்பரத் தானமாவி ராகமே. ௭௬

கமலமென் கழற்சிரத் தமையவைத்த லென்றுவேற்
குமரனுள்சி தம்பர விமலமெய்த்த வத்தனே. ௭௭

தவாதசீர்ச்சி தம்பர சுவாமிவேலர் போரியை
யவாவுமெங்க ளுண்மலர் நிவாததீப மாமரோ. ௭அ

அராவணிந்த செஞ்சடை நிராமயன்கு மாரனைப்
பராவுவோர்சி தம்பரப் புராதனன்சி றார்களே. ௭௯

சிறுவர்குற்றம் யாவையும் மறுவெனக்கொ ளாதருள்
நிறுவுமால்சி தம்பரப் பொறுமைமிக்க புண்யனே. அ0

வேறு

புண்ணி யம்பெறும் பொருவி லார்தவம்
எண்ணி லாவதோ எழில்கொள் போரிவாய்
நண்ணி அண்ணலை நவில்சி தம்பரத்
திண்ணி யன்புகழ்ச் சீர்மை செப்பவே. அ௧

செப்பு லாமுலைத் தெரிவை மார்மயற்
றப்ப லாகுமால் சமர மாபுரி

அப்ப னார்முனுண் டருள்சி தம்பர
ஒப்பி லாமணிக் குவகை கூரவே. அ௨

கூரர் ஐம்புலக் கோளர் தம்வயஞ்
சார வைத்திடுந் தகைசி தம்பரச்
சீர ருந்தவச் செம்மல் போரியான்
பேர கங்கொளும் பெரியர் வீறவே. அ௩

வீறு ஞானமும் விரவு செல்வமும்
ஊறு மின்பமு முதவி யாயுள்பன்
னூறு நல்குநூல் நுவல்சி தம்பரத்
தேறு மாதவன் செவ்வி தேரவே. அ௪

தேரின் ஒண்சுடர் சேர்ந்தன் போரிமுற்
சாரின் மின்மினித் தன்மை யாதல்போற்
பாரின் நீள்சிதம் பரம ணிக்குமுன்
ஓரின் வேறுதே வர்க்கு ளார்களே. அ௫

ஆர்ந மக்கெலாம் ஆரு யிர்த்துணை
தார்க டம்பெனத் தரிக்கு மார்பினன்
ஆர்வ நீள்திருப் போரி வாழ்வுளங்
கூர்சி தம்பரக் குரவர் போல்வரே. அ௬

வரவு போக்கிலா வாழ்வு நல்குமாம்
புரவு சூழ்ந்தபோ ரிப்பிரான் றரும்
வரசி தம்பரத் தவம கத்துவன்
சரண பங்கயந் தலைக்கொள் பண்பதே. அ௭

பண்டை வல்லிருட் பகையை வெல்வல
னுண்டு போரிவா ழுத்த மன்வரங்
கொண்ட மெய்ச்சிதம் பரகு ருளர்தந்
தொண்டர் பொன்னடித் தொண்டு செய்யவே. அ௮

செங்கை கூப்பவுஞ் சென்னி தாழ்த்தவும்
அங்கை யாலருச் சிக்கவுந் நலன்
துங்க மார்சிதம் பரசு கோதயம்
எங்க ளல்லல்தீர்த் தினிது தந்ததே. அ௯

தந்தமா னொலித் தாரகா சலத்
தந்தி வண்ணர்வா லாம்பிகைக் கெழில்

மைந்தர் போரியின் வருசி தம்பரத்
தந்தை பால்மனஞ் சார்ந்து நின்றதே. கூ0

வேறு

நிற்கு நிலையுந் தன்னடிக்கண் நேய வுறவுந் தவம்பயிலக்
கற்கு மதியுந் தனைப்பணிவார் களுக்குத் தருகின் றாய்சரணம்[க்கொண்
சொற்குப் பொருளாய்ப் போரியில்வாழ் தோன்றாத் துணையே துணையா
டெற்குள் மருவு சிதம்பரப்பேர் இறைவா சரணஞ் சரண்உனக்கே. கூக

உன்னைப் பணிய உனக்கழியா உறுதி தரும்போ ரிக்கடவுள்
தன்னைப் பணியப் பணிமறவாத் தன்மை யளிக்கின் றாய்சரணம்
பொன்னைப் பணியை நிகரவொரு தானு நினைவும் பொருந்துமென
முன்னைப் பணித்தாள் சிதம்பரப்பேர் முனிவா சரணஞ் சரண்உனக்கே.

சரஅ சரங்க ளாம்உலகந் தனது நினைவில் நிலவுறும்அக்
கரவின் நினைவு தனதுசத்தை கொடுகா ணுறுமென் றாய்சரணம்
மரவ முடுவின் மலர்பிரணவ மலைசூழ் போரிப் பரஞான
குரவற் கினியசி தம்பரவான் குன்றே சரணஞ் சரண்உனக்கே. கூந

உனது திரிவால் அகிலமெனும் உருவ நாம மினமென்று
மனது ணுணரா தவனருளான் மயர்வு தீர்வென் றாய்சரணந்
தனத னிலுமிக் குயர்செல்வந் தந்த போரிப் பெருமானைத்
தினமும் இறைஞ்சு சிதம்பரத்தே சிகனே சரணஞ் சரண்உனக்கே.

சரணர்க் களியான் நினைவொழிவிற் றமுவுஞ் சொருப நிலையென்று
கரண மொருங்கப் புலப்படுத்திக் கடைத்தேற் றிடுவாய் சரணமுயர்
கிரண பாநு வெனும்போரிக் கேள்வன் றருமே ரின்பநிலை
யரண மருவு சிதம்பரஆ நந்த குணவா ரியசரணம். கூரு

ஆரே எமதுள் ளுயிர்க்குறுதி எனவந் தவர்க்கு முப்புடியின்
தூரே யகலச் சொருபஞானந் தோன்றி டுமென் றாய்சரணம்
ஊரே போரூர் குகனுடையான் உடையான் தனக்குத் தானுடைமைப்
பேரே என்னுஞ் சிதம்பரத்தண் பெருமா மணியே சரண்சரணம்.

மணியே சரணம் சிவஞான வளமே சரணம் சிதம்பரப்பொன்
னணியே சரணம் போரிஎம்மான் அடிமைக் கியைந்த சிவபுண்யப்
பணியே சரணம் சிவயோகம் பதிந்த பரமா நந்தஅமு
துணியே சரணம் மெய்ம்மைபொய்ம்மை யுணர்ந்த திருமந் திரசரணம்.

திரையில் கடல்போல் உயர்சிந்தை தெளிதல் சாக்கி ராதீதம்
புரையின் மலவல் லிருளில்சிவ போகம் நிலையென் றுய்சரணம்
வரையில் பிரணவ கிரிச்சாரல் வளரும் போரூர்ப் பரமனருட்
கரையி னுறையுஞ் சிதம்பரச்செங் கனக மேரு வேசரணம். கூஅ

மேவும் பொருளின் நினைவொழிந்து வேற்றோர் பொருளின் நினைவா
தாவும் இடையின் மனம்இலதாற் சரத மஃதென் றுய்சரணம் [முன்
யாவுந் தனதாந் திருப்போரி யாறுமு கேசன் புகழ்க்குளமும்
நாவுந் தந்த சிதம்பரமெய்ஞ் ஞானி சரண்உன் திருவடிக்கே. கூகூ

திருவார் வாலாம் பிகைகயிலைத் தேவர் மைந்தா சரணமெனை
வருவாய் சரணந் தவவுருவ வள்ளல் சரணம் பராநந்த
உருவாம் போரூர்ப் பிரானருளி னொளியே சரணஞ் சரணம்வண்மை
தருவாய் சிதம்ப ரப்புநிதா சரணம் ஞான பூதரனே. க00

வாழி

தரையோர் புகழ்வேம் படிவேழஞ் சத்தி கைலைப்பி ரான்பிரணவ
வரைசூழ் போரி வள்ளிதெய்வ யானைம ணாளர் பதம்வாழி
குருவாஞ் சாந்த லிங்கவள்ளல் குமார தேவர் நிலைவாழி
அருள்கூர் சிதம்ப ரத்தேவ ராதி னமும்அன் பரும்வாழி.

**திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.**

உ

முருகன் துணை

## நப்போரூர்ச்

# ம்பரசுவாமிகள் சரித்திரம்

உலக மிறைஞ்சு நிலைபெற் றுளதாய்க், காண்டரு வளர் பாண்டிநன் னாட்டின், வருபல பாண்டியர் திருவா சிருக்கையாய், மலைய மாதவனென நிலவுமெய்க் குரவனாற், றலையளி செயநனி வளர்தமிழ்ப் பெரும்பயன், பொங்கப் பலவிளை சங்கப் பலகைசேர், தெய்வத் தகைய தாம் வையை யுடுத்ததாய், எண்ணில்சீர் அங்கயற் கண்ணி மணாளன், திருவிளை யாடல் இருநா லெட்டு, நிகழ்தரு தலமெனப் புகழ்திரு மதுரையிற், சங்கப் புலவர் மரபிற் றோன்றிச்-சிதம்பர கவிராஜரென் னும் பெயரினராய் - அங்கயற்கண் அம்மை யுபாசனாவிரதம் மேற் கொண் டிருந்தனர்.

கொங்கு தேயத்திலுள்ள பேரூர் அவிநாசி யென்னுந் தலத்தில், வீரசைவ சமயாசாரியராகி வீற்றிருந்த சிவப்பிரகாச சுவாமிகளது அருள் பெற்ற அவரது சகோதரி புத்திரராகிய சாந்தலிங்கசுவாமி கள் குருமூர்த்தமாகி எழுந்தருளி இருந்தநாளில், கன்னடதேயம் புங்கனூரில் அரசியல்புரிந்து இளமையிற்றானே துறவுபூண்டு சாந்த லிங்க சுவாமிகளால் ஞானோபதேசம்பெற்று, அவர் கட்டளைப்படி விருத்தாசலத்தில் வந்த குமாரதேவர் மணிமுத்தா நதிக்கரையில் ஓரரசமர நீழலி லெழுந்தருளியிருக்க, அம்மரத்தின்கண் பூர்வம் ஒரு காரணத்தாற் காத்திருந்த பிரமராக்ஷசு குமார தேவரது தீக்ஷண்யத் தால் அவர்க்கெதிர் வரலும், அவர் 'யார்நீ?' யென வினாவ, அது தனது *பூர்வ சரித்திரங்களை விண்ணப்பஞ்செய்து தரிசனைபெற்று முன்னைய தேகத்தை யடைந்து விடைகொண்டு சென்றது.

---

*பூர்வ சரித்திரமாவது, தான் கைலைச்சாரலிற் காமியத்தை யுத்தேசித்துத் தவம்செய்ததும், பரமசிவம் பிரசன்னமானபோது நிஷ்காமியத்தைப்பற்றி வரங் கேட்டதால் இவ்வுருவாகென்று சபித்ததும், அங்கு நிஷ்காமியத்தை முன் னிட்டுத் தவம்புரிந்த மற்றோர் மூவருள் ஒருவர் சிவப்பிரகாசர், ஒருவர் சாந்த லிங்கர், மற்றொருவர் குமாரதேவராய் வருவரென்றதும், அக்குமார தேவராற் சாபம் நிவர்த்தியாயிடு மென்றதுமாம்.

இவற்றைப் பாடலாகியுள்ள சிதம்பரசுவாமிகள் புராணத்திற் கண்டுகொள்க.

பின்னர், குமாரதேவர் ஆறுமாதத்திற் கொருமுறை சாந்தலிங்க சுவாமிகளது தரிசனார்த்தம் அவிநாசிக்குச் சென்று விருத்தகிரிக்கு வரும் நியமங்கொண்டிருந்தபடி தாம் விருத்தகிரியி லிருந்துவரும் மார்க்கத்தில், ஓரூரிற் சிவபத்தியிலும் அடியார் பூசனையிலும் முதிர்ந்த அன்புள்ள ஒரு ரெட்டியாரது வேண்டுகோளால் அவர் இல்லத்திற் பிக்ஷை யங்கீகரித்து நடக்கின்றவரா யிருந்தபோது, அவருக்குப் புத்திரர்களுண்டாக அநுக்கிரகிக்கப் பிறந்த குழந்தைகளுக்கு, ரெட்டியார் வித்தியாப்பியாசஞ் செய்விக்கவேண்டிச் சிதம்பர கவிராஜர் அவ்வூர்க்கு வரக்கண்டு உபசரித்து, அவரைக்கொண்டு கல்வி பயில்வித்து வருகையில், அக்காலத்தில் வந்த குமாரதேவர் அங்கு சிதம்பர கவிராஜர் அப்பிள்ளைகளுக்கு வாசிப்பிக்கின்ற வன்மையையும் கல்வி மாட்சிமையையுங் கேள்வியுற்று நோக்கி, அவரை ஆட்கொள்ளக் கருதிச் சில வேதாந்தச் சொற்களுக்குப் பொருள் வினவ, அவர் உத்தரஞ்சொல்ல இசையாமற் சும்மா இருந்ததை நோக்கி, 'நாம் வினவியவை அரிய பொருளினவாதலால், இன்னொருகால் இவண் வரும்போது சொல்க' என் றுரைத்துச் சென்று தமது ஆசிரிய தரிசனம் பெற்று விருத்தாசலஞ் சேர்ந்திருந்து, பின்னும் அவ்வாறு வந்தபோது, ரெட்டியார் கிருகத்தில் கவிராஜரை நோக்கி வினவ, முன்னையவாறே சும்மா இருக்க, 'நாம் பிக்ஷை பண்ணிக்கொண்டு வருவதற்குள் முன் வினவிய சொற்களுக்குப் பொருள் சொல்லக் கடவை' என்று கட்டளையிட் டுள்ளேபோந்து புசித்துவந்து கிருபாநோக்கத்தால் கேசாதிபாதம்வரை மூன்று முறை நோக்கித் தமதாசிரியரிருக்குந் திசையை முன்னி வழிக்கொண்டனர்.

சிதம்பர கவிராஜரும் அச்சொற்களின் பொருள்களை யுள்ளுணர்ந்து அன்பும் பத்தியும் மேலிட்டு அவரைவிட்டு நீங்காச்சாயைபோற் றொடர்ந்துசென்று அன் றிரவெல்லாம் நடந்து விடியற் காலையில் அவிநாசியிற் குரவர் இருக்கையிற் சேர்ந்தனர். அவ்வமயம் உதயகாலமானதால், குமாரதேவர் கோமயங் கரைத்துத் திருமடத்தின் தலைவாய்தலில் தெளிக்கச் சிதம்பரச் சுவாமி திருவலகிட இங்ஙனம் பணிபுரிந்து பின்னர்த் தத்தம் நியமங்களை முடித்து முன்னும் பின்னுமாக இருவரும் பரிணுமத்திற் புகுந்து சாந்தலிங்க மூர்த்தி சந்நிதானத்தில் தெரிசனார்த்தம் புறங்காத்திருக்க, ஆசிரியர் ஒடுக்கத்தினின்றும் புறம் போந்து அங்கு நின்ற இருவரையுங் கண்ணுற்று, மீண்டுள்ளே யெழுந்தருளித் தாம் இயற்றியுள்ள வைராக்கிய சதகம், தீபம், அவிரோதவுந்தியார், கொலை மறுத்தல் முதலிய நூல்களையும், கண்ணுடைய வள்

ளலார் ஒழிவிலொடுக்கத்தையும் எடுத்துவந்து தரிசன்தந்து குமார தேவரை நோக்கி, 'அப்பா நாம் உன்னைப் புத்திரனுகக் கொண்டாற் போல நீயும் இவ்வொரு புத்திரனைக் கொணர்ந்தாய்; இப்பிள்ளை கல்வி கேள்விகளாலமைந்த பக்குவ சாலியாகலால், இத்தோன்றலைக்கொண் டிந்நூல்களுக்கு உரை இயற்றுவித்திடுக.' என்று தாங்கொணர்ந்த புத் தகங்களைத் தந்தருள, அவற்றைக் குமாரதேவர் இருகையாலும் ஏற் றுக் கண்களிலொற்றிக் கொண்டு, சிதம்பர தேவரிடத்தில் அளிக்க, அவரும் கைகளிலேந்திச் சிரத்தில்வைத் தஞ்சலித்துநிற்க; குமார தேவர் ஆசிரியரை வணங்கித் 'தேவரீர் இப்பிள்ளையைப் புத்திரனுகக் கடாக்ஷித்தல் வேண்டும்'என்ன 'ஆசிரியர்' நமக்குப் புத்திரன் நீயிருக் கின்றனை; அவ்வாறுனக்குப் புத்திரனுக இவ்விளவலைக் கொள்க என்றருளி விடைதரக்கொண்டு சிதம்பர சுவாமியுடன் விருத்தா சலம் அடைந்தனர்.

இங்கு, குமாரதேவர் சிதம்பர தேவருக்கு வாதுளாகம வீராக மங்களிலும் உத்தர சைவ சித்தாந்தத்திலும் நிரூபணமாகியுள்ள வீர சாமானியம், வீர விசேஷம், வீர நிராபாரம் முதலிய இருபத்தொரு தீக்ஷையையும் வீரசைவ விதிமுறை அநுக்கிரகித்து, இயமாதி அங்க யோகங்களையுமுணர்த்தி ஞானோபதேசஞ் செய்து சமாதி கூட்டுவிக்க, அவ்வாறே தாம் அவற்றை உள்ளங்கைக் கனிபோல ஐயமாதி முத் தடையுமற நன்குணர்ந்து ஞானசமாதி கூடியிருக்கையில், ஒரு மயில் தோன்றித் தனது சிறகை விரித்துச் சொரூபத்தை மறைத்து நிருத் தம் செய்ததைக் குமார தேவரிடத்தில் விண்ணப்பஞ்செய்ய, ஆசிரியர் அந்த இரகசியத்தைப் புலப்படுத்தாமல், சிதம்பரமூர்த்தியை நோக்கி 'உனக்கு உபாசனுமூர்த்தியா யுள்ளது யாது?' என்ன, 'மதுரை அங்க யற்கண் அம்மை'எனக் கேட்டு, 'நம்மை இங்குப் பெரியநாயகியார் ஆட் கொண்டு உயிர்க்குறுதித் துணையா யிருக்கின்றபடி, நீ மதுரைக்குச் சென்று அங்கயற்கண் அம்மையை உபாசித்தால் தேவியார் உனக் குறுதித் துணையாய் நின்று அதனைப் புலப்படுத்தும்' என்று விடை தரச் சிதம்பரமூர்த்தி ஆசிரியரை வணங்கித் 'தேவரீரே அதனைத் திருவுளம் பற்றலாகாதோ' என, ஆசிரியர், 'அப்பா உனக்கு உபாசனு மூர்த்தியாயுள்ள தேவியார் சந்நிதிக்கே போதல் நலன்' என்றுரைத் தனர்.

குருவாக்கியந் தவறுமல் திருமதுரைக் கெழுந்தருளி நாற்பத் தைந்துநாள் கொண்ட ஒரு மண்டல அளவையுள் தேவியார் தரிசனந்

தந்தருளாவிடில் அங்குள்ள பொற்றாமரைத் தீர்த்தத்தில் தாம் வீழ்ந்து வியூகமா யிடுவதாக நிச்சயஞ் செய்துகொண்டு, தேவியார் சந்நிதிக்கெதிரில். நாடோறும் பொற்றாமரையிலாடி நித்தியநியமம் முற்றி ஒருபிடி பச்சறுகும், மூன்றுகை அத்தீர்த்தமும் ஒரே வேளைப் புசிப்பாக வுட்கொண்டு நிஷ்டை சாதித்திருக்கையில், தேவியார் சோதனை காரணமாக, சுரமும் கைகால் பிடிப்பும், சிரங்கு முதலிய நோய்களும் சம்பவிக்கச்செய்ய, அவற்றால் மிகவும் வருத்தங்கள் நேரிட்டும், தமது ஊக்கஞ் சோராமலும், அருந்தவம் தவறுபடாமலும் நிலைத்துச் சிலநாள் செல்லப் பின்பு, தம்மால் எழுந்து நிற்கவும் அசையவும் அசக்தராய்த் தவறாற்றாழியும் தாம் நின்ற நிலை பெயராமல் அங்கு தரிசனார்த்தம் வருகின்றவர்களால் அருகும் நீரும் வருவித்துத் தினந்தோறும் உச்சிக் காலத்தில் அவற்றைப் புசித்து, அந்நாள் அளவை வரையில் தமது விரதத்தை நிறைவேற்றி மீனாக்ஷியம்மையின் அநுக்கிரகார்த்தம் கலிவெண்பா என்னும் ஒரு தமிழ்ப் பிரபந்தம் பாடினர். அதுபோழ்து தேவியார் திருவுளமகிழ்ந்து எதிர்வந்தருளி, இவரது சரீரத்திலுள்ள பிணிகளுடன் மலப் பிணியும் விலகுமாறு மலர்க் கரத்தால் தடவித் திருவாய் மலர்ந்தருள்கின்றார்: "உனது அனுபவத்திற் சொரூபத்தை மயிலாடி மறைக்கின்றதாவது, இப்பதியின் வடபால் முப்பதுயோசனை தூரத்தில் யுத்தபுரி என்று சுப்பிரமணிய க்ஷேத்திரம் ஒன்றுண்டு. அஃது, இதற்குமுன் ஆறுதரம் பிரசித்தியாய் விளங்கியிருந் திப்போது ஜீரணப்பட்டிருக்கின்றது. இனி ஏழாந்தரம் உன்னாலே ஜீரணோத்தாரணமாகி நிலைபெற்று விளங்கவேண்டுவதா யுள்ளது. அத்தலமூர்த்தியே உனக்குக் குருவடிவாய் எழுந்தருளித் தரிசனந் தந்து மேல் உண்மையை விளக்கும். இக்காரணமாக அக்கடவுள் உனது நிஷ்டாநுபவத்தில் மயிலுருவாய் வந்து சொரூபத்தை மறைத்ததென்று காண்க. ஆதலால் நீ இதுபோதே அத்தலத்திற்குச் செல்க" எனத் திருவுளம் பற்றினர். இவ்வா றருள்பெற்ற சிதம்பரதேவர் "சிவஞானப்பேற்றை அடையும்வண்ணம் எண்ணிய அடியேனுக்கு, 'ஸ்தல ஜீரணோத்தாரணம் செய்க' என்றோ அருளிச்செய்தீர்? தாமே அடியேன்வேண்டுகோளை யநுக்கிரகிக்கலாமே என்று குறையிரக்கத் தேவியார், 'இன்றுமுதல்நாற்பது தினங்களுக்குள் அத்தலத்துமுருகவேளே ஆசிரியவுருவாய் முன்வந் தருள்புரியு மாதலால் உனக்கு அவண் அநுபூதி சித்தியாகும். இவ்வமயம் தவறுபடில் மேலே ஜனனமெடுக்க வரும்; 'அஞ்சேல்'என உரைத்து மறைந்தருளினர். அவ்வாறே சிதம்

பரமூர்த்தி தேவியார் அருட்பிரசாதத்தை மேற்கொண் டடிவணங்கிப் போற்றி யுத்தபுரி என்னுந் திருப்போரூரை நோக்கி வடதிசை வழிக்கொண்டு வருவாராயினர். இது நிற்க.

அந்நாளில் திருப்போரூர் ஆருவது முறைஜீரண முற்றுப் பனங்காடாகிப் பலவகைக் கொடிகளாலும், செடிகள் விருக்ஷங்களாலும் அடர்ந்ததாயிருந்தது. அக்காட்டில் ஒரு பெண் பனைச்சாரலில் ஸ்ரீசுப்பிரமண்யம் புற்றிடங் கொண்டு வீற்றிருந்தது. அக்காட்டின் கிழக்கே சிலர் பயிரிடுந் தொழிலினராய் வீடுகட்டிக்கொண் டிருந்தனர். அவ்வூரில் விஸ்தாரம் பனைமரங்க ளுள்ளனவாகையால் சான்றூர்கள் சிலர் அம்மரங்களின் பானம் சாறு நுங்கு பழம் கிழங்கு முதலியவைகளால் ஜீவனஞ் செய்து வந்தனர். அவருள் ஒருவன் அப் பனங்காட்டிடத்தில் ஒரு பெண்பனைமரம் நன்று யுயர்ந்தோங்கி வளர்ந்து ஓலைக்கோர் பாளையாக அரும்பிவிசேஷித்துக் குலைகள் செழித்திருந்ததைக் கண்டு அம்மரத்தையடர வூறுங்கொடிகள் சூழ்ந்திருந்ததைக் களைந்து அம் மரத்திலேறிப் பாளைகளைச் சிணுக்கறுத்துக் குடங்களைப் புகட்டி, அதனாற் கிடைத்த மதுவின் பயனை ஒருபொழுது காண விசேஷ பிரயோசனம் பெற்று, அன்றுமாலைப் போழ்தில் வந்து பார்க்க, முன் போலவே அக்கொடிகளால் அது அடரப்பட்டிருந்தது கண்டு, அவைகளைத் துணித்து மதுப்பலனைக் கைக்கொண்டனன். அங்ஙனம் நாடோறும் அதிகரித்துப் படர்ந்து சுற்றிக்கொள்ளும் அக்கொடிகளை, இரண்டு காலமுங்களைந்து, அம்மரத்திற் குடங்குடமாகவரும் மதுவை அவ்வொருவனே கொண்டு போகத் தொடங்கினன். நாடோறும் கொடிகளையறுப்பதில் அவன் மிகவும் வருத்தமுற்று, அதனை வேருடன்களைய எண்ணி அதற்கேற்ற கருவிகளைக் கொண்டு சிலருடன் வந்து, சுற்றிலுமுள்ள புதர்களை வேர்களைந்து வருகையில், அம்மரத்தின்கீழ்த்திசையினின்று மேற்றிசையில் ஓங்கிப் பருத்துக் கீழே உருவியோடிய மூலவேரைப் பற்றி, அரிவாளால் வெட்ட, அங்குள்ள புற்றில் திருமேனி மறைந்துள்ள சுயம்புவின்மேல் தாக்கினதால், சிவப்பு உண்டாயிற்று. அதனைக் கண்டு சான்றுன் முதலியோர் துண்ணென அச்சுற்றுத் துடித்து மூர்ச்சையாயினர். இவ்வாறு நோக்கிய பிறனொருவன், அயலிலுள்ள பனைமரங்களில் ஏறிக் கொண்டிருந்தவர்கட்குத் தெரிவிக்க, அவர்கள் பொள்ளென வந்து மூர்ச்சை யுற்றவர்களைச் சீதோபசாரம் செய்து, பெண்பனையின் அடியைப்பற்றி நன்கு சோதித்துப் பார்க்க, அப்புற்றினுட் சுயம்புவைக் கண்டு அஞ்சிப் பத்தி மேலிட்டு, முருகக்

கடவுளைத் தோத்திரம் செய்ய, மூர்ச்சை யடைந்து கிடந்தவர்கள் தெளிந்தெழுந்து போற்றினர். அதுமுதலாக அச்சான்றூர் தமக்குள் ஏணிக்கோர் பெரிய பணம் ஏற்பாடு செய்து,சுவாமிக்குக் கூரைக்கட்டிட மாக ஒரு சிற்றாலயம் புரிவித்து, அவ்வூர்க் குடிகளுடன் சேர்ந்து சுவாமிக்குப் பூசை முதலியவை நடத்த, ஆதிசைவர் ஒருவரை நிய மித்தனர். அவர்முதல்நாள் சுவாமிக்குத் திருமஞ்சன முதலியசெய்து கற்பூர ஆராதனை செய்கையில், அவ்வூரும் குற்றாலயமும் அந்நிலையே வேறோர் காரணமின்றிப் பற்றிக்கொண்டது கண்டு, அவ்வாதி சைவர் அஞ்சி ஓடிப்போயினர். ஊராரும் மிகவும் பயந்திருந்தனர். அது காரணமாக சுவாமிக்குச் சின்னாள்பூசை முதலியவுமில்லாம லிருந்தன.

இப்பால் சிதம்பரசுவாமிகள் அங்கயற்கண் அம்மையருளியதை விண்ணப்பம்செய்ய நினைந்து, மதுரையினின்றும் விருத்தாசலத் திற்கு வந்து பார்க்க, அவ்வமயம் குமாரதேவர் நிஷ்டையிலிருந்த படியால், 'நிட்டை தெளியக் காலம் நீடிக்கும்; அதுகாறும் இங்கிருந்து சேவித்துச் சொல்லிக்கொள்ள வேண்டின், தேவியார் கட்டளையை நடத்தத் தாமதிக்கு'மென்று கருதி (அகண்டாகார மயமாகிச் சுட் டிறந்த சுகாதீதமாகி உலகுயிர்பரமென்று வேறு கருதற்கேலாத சச்சிதாநந்த சம்பூரண ஜோதியின் வசத்தராய் நின்ற நிலைபெயராத) ஆசிரியரை வலமுறவந்து வணங்கிப் புறவிடை கொண்டு வடதிசை வருகையிற் பொம்மைய பாளையமென்னும் ஊரிற் சிவாநுபூதிச் செல்வ ராகியும், சதுரக்கள்ளிப்பாலே தமதுணவாக உண்பவரும் சிதம்பர சுவாமிகளது அதிதீவிர பக்குவ தசையால் கைவந்த அநுபவ சித்தி யைக் கேள்வியுற்று அவரைப் பார்க்க விருப்பங் கொண்டிருந்தவரு மாகிய பாலைய சுவாமிகளைத் தாமுங் காணுமாறு அவர் வசித்திருக்கும் வீதிவழியே செல்லாநிற்க, அச்சமயம் வைகறையாகலால் பாலைய சுவாமிகள் குளக்கரையிலிருந் தெதிராய் வர, இருவரும் நோக்கி அளா வளாவி வசனித்துக்கொண்டு திருமடத்தின் தெருத்திண்ணையில் எழுந்தருளியிருந்து, தந்ததாவனம் செய்துகொண்டே எட்டுநாள் வரை இராப்பகல் விடாமற் சுவாநுபவத்தை முன்னிட்ட நிலைகளைப் பேசிக்கொண்டிருந்து, ஒன்பதாநாளுதய காலத்தில் மேட்டுமடையில் திரும்பி வாய்பூசிக்கொண்டு சிவார்ச்சனை முடித்து அவருடன் புசித்து விடைகொண்டு வந்தனர். சின்னாள் பின்பு ஸ்ரீ மயிலாசலமென்னும் க்ஷேத்திரத்தில் தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீசுப்பிரமண்ய சுவாமி சந்நிதியில் பாலைய சுவாமிகள் நிரதிசயாநந்த பூரணராயினர்.

கிளியனூர் வழியே வரும் சிதம்பர தேவர் அவ்வூர்ச் சோலையிற் பாவோடிக்கொண்டிருந்த செங்குந்தரைப் பசிக்கு அன்னங்கேட்க, அவர்கள் 'அன்னமிடுதற்குச் சற்று நேரந் தாமதிக்கும்' என, அங்கிருந்து தமதுநிலையைக் குறிப்பாலுணர்ந்த ஒரு விதந்துவாகிய மூதாட்டி, இருவினையொப்பு மலபரிபாகம் நேரிட்டிருந்தாளாகையாற் சுவாமிகளைக் கண்டவுடன் பத்திமேலிட்டு வலம் வந்து பணிந்துபசரித்துத் தந்த கேழ்வரகாலாய புற்கையமுதைப் புசித்து, அம்மூதாட்டியைக் கிருபாநோக்கம் செய்து நடக்கப் பின் தொடர்ந்த அம்மையை நோக்கித் 'தாயே! நீ தொடர்வது யாது கருதி?' என வினவத் 'தேவரீர்க்கு அடியேன் பணிவிடை புரிந்து புனிதையாக வேண்டினேன். அது பாலித்தருளல்வேண்டும்' என்று போற்றக்கேட்டு, நாம் திருப்போரூர் என்னும் க்ஷேத்திரத்தை ஜீரணோத்தாரணம் செய்க' என்று மதுரை அங்கயற்கண் அம்மை யருளியவாறு அப்பதிக்குச் செல்லாநிற்கின்றோம். இன்னும் ஓராண்டிருந்து நம்பால் வருக' என்றநுஞைசெய்து மலை கான் யாறுகள் பிற்படக்கடந்து, திருப்போரூராகிய பனங்காட்டிலணுகி, அங்கு வள்ளைப்பூடால் நிறைந்த ஓரோடையைக் கண்ணுற்று, நியமங்களை முற்றி, அவ்வழி வந்தோரை 'இங்குக் கோயிலிருக்கின்றதா?'வென்னச் 'சுவாமி! மலைச்சாரலின் கீழ்பால் வேம்படிவிநாயகர் கோயில் ஒன்றுள்ளது' என, சிதம்பர தேவர் பிள்ளையார் சந்நிதிக்கு வந்திருந்து அன்றுமுதல் இரண்டு நாள்வரை அத்தீர்த்தத்தில் மூழ்கிச் சிவபூசை முதலியவற்றை முடித்து வசித்தனர். மூன்றாம் நாள் மாலைப் போதில் அத்தீர்த்தத்திற்கு வருகையிற் கள்வர்சிலர் சுவாமிகள் அணிந்துள்ள ஆபரணங்களைப் பறித்துக்கொண்டுபோகப் பதுங்கியிருந்து வெளிப்பட்ட மாத்திரத்தில், அவர்களுக்குக் கண்கள் தெரியாமற்போய் நடுங்கி நிற்க, 'நீங்கள் யார்?' என்று சுவாமிகள் கேட்டவளவில், தாங்கள் இன்னாரென்றும், செய்யவந்த காரியம் இன்னதென்றும் சொன்னவுடன் தாம் பூண்டிருந்த ஆபரணங்களைக் கழற்றிக் கொடுத்தலும், அவர்கள் பெற்றுக்கொள்ளாமல், மிகவும் அச்சமுற்று நமஸ்கரித்துத் 'தேவரீரது தெய்வத் தன்மையைச் சற்றும் அறியாத பாபிகளாய்க் கண்ணொளிஇழந்தோம்; க்ஷமித்துக் கடாக்ஷிக்க வேண்டும்' என முறையிட்டோலமிடச் சுவாமிகள், 'கள்வர்களே! இழந்த கண்கள்வரக் கூடுமோ?' என, 'நாங்கள் அறிவின்றிச் செய்த குற்றங்களைப்பொறுத்து எவ்வாற்றானும் இப்புலைஞரான எங்கட்குக் கண்கள் தெரியும்படிக் கிருபை செய்யவேண்டும்' என்று பிரார்த்திக்க, 'நீங்கள் இதுகாறும்

களவாற் சம்பாதித்த பொருள்களுள் உமது சீவனும்சத்திற்குச் சென்றது போக, மிகையாய் நிற்கும் பொருள்களை முருகக்கடவுளுக்கு அர்ப்பணமாக்க உடன்படுவீராயின், கண்கள் விளங்குமாறு சுவாமி கடாக்ஷிக்கும்' என்றதைக் கேட்டுத் 'தத்தஞ் செய்தோம்' என்று பாதத்தில் வீழ்ந்துதெண்டனிட, அக்கணமே அக் கள்வர் யாவர்க்கும் கண்கள் நன்குய்த் தெரிய, சுவாமிகள் 'அப்பொருள்களைக் கொண்டு வருக' எனக் கட்டளையிட்டு வள்ளையாரோடையில் நீராடி நித்திய நியமங்கள் புரிந்து, அப்பனங்காட்டை நோக்கி வருதலும், அதன் நடுவில் ஒரு பெண்பனை மூலத்தில் ஸ்ரீ சுப்பிரமணியம் சுயம்புவாய் முளைத்திருந்தருளியதைப் பார்த்து, அன்று தொடங்கிச் சுவாமி சந்நிதியிற் சரண சம்பந்தமில்லாமல் தரிசன மாத்திரம் செய்துகொண்டு பிள்ளையார் கோயிலில் வசிப்பவராயிருந்தனர். அங்ஙனமிருக்க, ஒரு தினம் முருகக்கடவுள் குமாரதேவரைப் போலெழுந்தருளக் கண்டு, சிதம்பர சுவாமிகள் அச்சமுற்று விரைந்தோடிச் சென்று, சரணஞ் செய்து நிற்க, ஆசிரியர் நோக்கி 'நீ இவண் வசிப்பது என்னை?' என, அங்கயற் கண் அம்மை அருளியதை விண்ணப்பம் செய்ய, 'ஆயின் யாமிருவரும் முருகக்கடவுளைத் தரிசிப்போம் வருக' வென்று முன்னும் பின்னுமாய்த் தொடர்ந்தணுகும்போது, சுவாமிகள் ஆசிரியரை நோக்கி, ஆதியில் இவ்வாலயம் எத்துணை விசாலமும் தன்மையுமாகி யிருந்த'தெனக் கேட்டனர். அதற்கு ஆசிரியர், சிதம்பர சுவாமிக்கு நெற்றியில் திருவெண்ணீறு சாத்தி, நேத்திரத்தாற் பரிசித்து, 'ஆலய அளவும் தீர்த்தம் திருவீதி முதலியவையும் பார்ப்பாய்' என்ன, அவ்வாறு பார்க்குங்கால், ஆலயம், கர்ப்பக்கிருகம், அந்தராளம், மஹா மண்டபம், சர்வ வாத்தியமண்டபம், தேவியார்சந்நிதி, மடைவளாகம், திருமதில், கோபுர வாயில், மயில் மண்டபம், துவஜஸ்தம்பம், பலிபீடம், பிராகார வீதி, மாட வீதி, மடாலயம், தீர்த்தம்முதலியயாவும் சிற்பநூலளவைப்படி அனந்த விசித்திரமாகவும் சிறப்பாகவும் விளங்கக் கண்டனர். ஆசிரியர் அவ்வாலயத்துட்புகுந்து, முருகக்கடவுள் சந்நிதியிற்சிதம்பரதேவர்க்கு அநுக்கிரகித்து 'ஹரஹர' வென்றருளிய மஹா வாக்கியத்துடன் மூலஸ்தானத்தில் சுயம்புவாய் வீற்றிருக்கும் தம்மைத்தாமே நோக்கி அஞ்சலிமுகிழ்த்தாராயினர். அப்போழ்து முருகக்கடவுளாகிய ஆசிரியரது திருவடிகளை எதிராகக் கொண்டு, வடதிசையாய்ச் சாட்டாங்கமாகச் சரணம் புரிந்தெழுவதற்கு முன், ஆசிரிய உருவாய் வந்தருளிய மூர்த்தி திருவுருக்கரந்தனர். சிதம்பரதேவர் எழுந்து பார்க்கையிற் சுவாமி

பனைமரமூலத்திற் பழையபடியேயிருக்க நோக்கி, அளவிலாத ஆனந்த வசத்தராய் அதிசயித்தனர்.

ஸ்ரீ சுப்பிரமணியமே சிதம்பரசுவாமிகளது ஆசிரியராகிய குமார தேவர் வடிவா யெழுந்தருளி யநுக்கிரகம் புரிந்தாட்கொண்டபடியால், சுவாமியே தமக்குக் குருமூர்த்தமாக நின்றது. அந்நாள் தொடங்கிச் சரணசம்பந்தம் நடந்துவருகின்றது. பின்பு, கலிவெண்பாவால் நெஞ்சு விடுதூது என்னும் ஒரு பிரபந்தமியற்றி, விருத்தகிரியின்கண் குமார தேவர்க்கனுப்பி விநாயகர் கோயிலில் வசித்திருந்தனர். அதனை யறிந்த ஒரு குலாலன் பிள்ளைகள், அவ்வாலயத்தின் வடபாலுள்ள கண்ணு வப்பேடென்னும் ஊர்க்கருகிற் கீழ்பால் நெடுநாளாய் நேத்திரந் தெரியாதிருந்த தமது தந்தையைப் பார்த்து, 'ஐயா, வேம்படிவிநாயகர் கோயிலில் ஒரு பெரியவர்எழுந்தருளி யிருக்கின்றனர். அவரைச் சரண் புகில் உமக்குக் கண் தெரியும்படி செய்தருளுவர்' என்ன, வயதால் முதிர்ந்த அக்குலாலன், மைந்தர் சொல்லை நம்பிச் சுவாமிகளிடத்திற் சென்று பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து, பக்தி பூர்வமாக வேண்டு கோள் செய்ய, அதற்குச் சுவாமிகள், 'ஸ்ரீ சுப்பிரமணியம் நீ எண்ணி யாங்குக் கடாக்ஷித் தருளும்' என்று சிந்தித்தவுடன், அவனுக்குக் கண்ணிரண்டும் தெரிந்தன. அக்குலாலன், 'அடியேன் சிறுகுடிலின்கண் ஒரு புளிய மரமிருக்கின்றது; தேவரீர் இத்தலத்தினின்றும் அங்கெழுந்தருளி வசிக்கலாம்' என்றுபசரித்துப் பிரார்த்திக்க, அன்று தொட்டு அம்மர நீழலில்வந்து அக்கினி வளர்த்துக் கொண்டு வீற்றிருந்தனர். மற்றோர் நாள் திருப்போரூரை யடுத்த வடகிழக்கிலுள்ள காலவாக்கமென்னும் ஊரில் ஒரு முடவன் சுவாமிகளைத் தரிசித்துச் சரணமடைந்து *நெகிடியிற் பூத்த திருநீறருளப் பெற்றுக் கொண்டு பவித்திரனானான். இம்மகிமையைக் கேட்ட அநேகர் தம்மை வருத்திய வெப்பநோய், சூலை, வயிற்றுவலி, மஹோதரம், காமாலை, குடல்வாதம், குட்டம், பெரும்பாடு, தலைவலி முதலிய பெருநோய்களை நிவர்த்தி செய்துகொள்ள வேண்டி அங்குவந்து வழிபட்டு வணங்கிச் சுவாமிகள் அருளிய நெகிடித் திருநீற்று மருந்துபெற்று அவ்வவ் வியாதிகளினின்றும் நீங்கிச் சுகமுற்றனர். இப்பான்மையோராற் சில காணிக்கைகள் சேர்ந்தன. அவற்றுடன் முன்சொன்ன கள்வர்கள் கொணர்ந்த திரவிய முதலியவற்றைச் சுவாமிகளிடத்திற் செலுத்தித் தாமும் அடிமையாய் ஏவற்பணி செய்து நின்றனர்.

* ஞெகிழி என்பது - நெகிடியென மருவியது.

அங்குள்ள குடித்தனக்காரர்களும், சான்றோர்களும் இம்மகிமையைக் கேள்வியுற்று வந்து, பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்தெதிர் நின்று, ' இவ்வூர்ப் பனங்காட்டில் ஸ்ரீகந்தசுவாமி ஆலயம் ஜீரணமாகி சுயம்புவாகிய சுவாமிமாத்திர மிருக்கின்றது. அதற்குப் பூசை புரிந்து கர்ப்பூர ஆராதனை செய்யின், ஊர்பற்றிக் கொள்ளுகின்றது; அவ்வாறினி நேரிடா வண்ணம் ஆலய ஜீரணோத்தாரணம் செய்து நித்திய பூசை முதலியவும் நடத்துவித்து இவ்வெளியேங்களையும் காத்தல்வேண்டும்' எனக் குறையிரப்ப, சுவாமிகள் கருத்திசைந்து 'நாம் பரதேசியானதால் நம்மால் ஆவதென்ன? அளவற்ற நிதிவேண்டுமே? ஆயினும் நுமது வேண்டுகோளின்படி அவைக்கு முயற்சி புரியத் தொடங்கினால் நீவிர் செய்யும் உதவியாது?' என வினவ, 'எமது பதியாகிய இக்கிராமத்தை ஆண்டவர் பொருட்டுத் தந்திடுவதுமன்றிக் கடவுளுக்கு வேண்டிய ஏவல்களனைத்தும் யாங்களே செய்கின்றோம்' என்று உறுதியாயுரைத்திட, 'அங்ஙனம் இதுபோழ்தே செய்யத் தொடங்குவீராயின், திருப்பணி முதலியவற்றை நடத்தலாம்' என உரைத்தருளினர். அக்கணமே ஊரார் செப்பேட்டில் வரைந்து தத்தஞ்செய்து கொடுத்துச் சுவாமிகள் ஆஞ்ஞையின்படி நடந்துவரத் தொடங்கினர். சுவாமிகள் அன்னோருதவியாலும் தரிசனார்த்தம் வந்தவர்களுதவியாலும் ஆலயத் திருப்பணியை நடத்தவேண்டிக் கர்ப்பக்கிருகம் செய்யத் தொடங்கியபோது, முன்னர்க்கூறிய கிளியனூர்ப் பாதிரியின்கண்ணிருந்த மூதாட்டி, சுவாமிகள் கட்டளையின்படி காணிக்கை சேகரித்துக்கொண்டு இங்கு வரவேண்டு மென்றன்பு மிகுந்து, தனக்குப் பொருள் வருவாயின்மையால் அங்குள்ள செங்குந்தர் நூலிழைக்கையிலும், பாவோடுகையிலும், புடவைகள் நெய்வதிலும் நிலத்திற் சிந்துகின்ற நுண்ணூல்களை நாடோறு மெடுத்துச் சேர்த்துச் சிவத்தியானத்துடன் கோவை செய்து பின்படுவாக்கி அந்நூற்படுவுகளைப் புடவை நெய்வித்து விற்றதில் ஒரு பொன் கிடைத்தது. ஓராண்டு கழித்து அதனைக் கைக்கொண் டங்கிருந்து திருப்போரூர் சேர்ந்து சுவாமிகள் வீற்றிருக்கும் ஆச்சிரமந் தேடிவந்து தரிசனைபெற்று, அப்பொன் ஒன்றையும் குரு காணிக்கையாக வைத்து வலம்வந்து நமஸ்கரிக்கச் சுவாமிகள் நோக்கி, 'அந்நாளளவும் இப்பெண்பால் மெய்வருந்திச் சம்பாதித்துக் கொணர்ந்து செலுத்திய பேரன்பினை உள்ளுவந்து அப்பொன்னைத் தமது திருக்கையில் ஏந்திச் சென்னியிலும் நெற்றியிலும் கண்ணிலும் தோளிலும் மார்பிலும் வைத்துவைத்து ஆனந்

தத்தாலாடி அதனைக் கர்ப்பக்கிருகத்தின் சிகரவேலைக் குபயோகித்த னர். அத்தருணம் தரிசனார்த்தம் அங்கு வந்திருந்த சென்னைப் பாளையத்தா செட்டியாரென்பவர் அவ்வற்புதத்தைக் கண்டு இரண்டு பை வராகன் கொண்டுவந்து சுவாமிகளுக்கு முன்னே வைத்து வணங்க, அந்நிதியின்மேல் கண்ணோக்கஞ்செலுத்தாது, எட்டு நாளைக் குப் பின்னர் ஒருவாறுள்ளந் திரும்பி 'இந்நிதியைத் திருப்பணிக் குப யோகித்துக் கொள்மின்'என் றேவலாளர்க்குக் கட்டளையிட்டனர். அன்றியும் நாடோறுந் தரிசனத்திற்கு வருகின்றவர்கள் செலுத்தும் காணிக்கைகளாகிய நிதி யனைத்தும் அவரவர்களைக் கொண்டே சந்நி தானத்திற் சேர்த்துக் கர்ப்பக் கிருகம், அந்தராளம், மஹாமண்டபம், மயில் மண்டபம், துவஜஸ்தம்பம், பலிபீடம் இவற்றை நிறைவேற்று வித்து, மந்திர விசேடமான யந்திர ஸ்தாபனமும் இயற்றிக் கும்பாபி ஷேக முதலியவும் நிறைவுறுத்து நித்திய பூஜை ஆராதனையை நடத்தி

திருப்போரூர்த் தலத்தில் வசித்துப் பிரகிருதி உபாதைகளை விசர்ச்சனஞ் செய்வது தகுதியன்றென்று கருதிய சுவாமிகள், தாம் வீற்றிருந்த புளியமரத்தின் தென்கிழக்கில் தவஞ்செய்தற் கிசைவுள்ள ஒரு பரிணாம மியற்றவெண்ணிச் சரஸ்வதிகூடம், பூசையிடம், ஒடுக்க உறையுள் இவற்றை நிருமித்து, அதன் வடபாலிருந்த சிறு குளத் தைத் தடாகமாக்கி, அதன் மேற்பாங்கில் மட்சுவரெழுப்பித் தட்டோடு வேய்ந்த ஒரு குற்றாலயம் கட்டுவித்து, அதில் விநாயகப் பிரதிட்டை யும் வேலாயுதப் பிரதிட்டையும் புரிந்து, பிள்ளையார்க்குச் 'சுந்தர விநா யக'ரெனத் திருப்பெயர் சாத்தி, தடாகத்திற்கு 'வேலாயுத தீர்த்தம்' எனப் பெயர் கூறினர். முன்னர், ஸ்ரீசுப்பிரமணியமூர்த்தியின் ஆலயத் திருப்பணி தொடங்கின நாள்தொட்டுத்'திருப்போரூர்ச் சந்நிதிமுறை' எனப் பெயரிட்ட ஞானநூல், பஞ்சாதிகார விளக்கம் முதலியன நிலை பெற இயற்றி, ஆதியிற் குமாரதேவர் முன்னிலையிற் சாந்தலிங்கசுவாமி கள் 'உரையிடுக' என்றருளிய வைராக்கிய சதகம் முதலிய எல்லா நூல் களுக்கும் விருத்தியுரையுஞ் செய்தனர். பாதிரி யம்மையார்க்கு அநுக் கிரகித்து ஞானம்மை எனத் தீக்ஷாநாமமுந் தந்தனர். அவ்வம்மையார் ஆசிரியர் கட்டளையிட்டபடி பரிணாமத்தின் கீழ்ப்புறமார்க்கத்திற்கு வட பாரிசத்திருந்த கயத்தைப் பெரிய வாவியாக்கி, அதற்கு 'வற்றா நீர்க் குளம்' எனப் பெயர் புனைந்து, அதன் கரைச்சார்பில் நந்தவனம் தண் ணீர்ப்பந்தர் முதலிய திருப்பணிகள் செய்துகொண்டு, அதன் வடகரை

யில் ஆத்மார்த்தமாகச் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூசித்திருந்தனர். ஒருநாள் ஞானம்மை சிதம்பர தேவரிடத்தில் வந்து நமஸ்கரித்து, "மாணிக்கவாசக சுவாமிகள் ஓதியருளிய திருவாசகத்தில், 'புணர்ப்ப தொக்க எந்தை என்னை' என முதலெடுத்த பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்தல் வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்து, பன்னாள் தினந்தோறும் பிரார்த்தித்து வருகையில், ஒருநாளிரக்கமுற்று அப் பனுவற்குப் பொருளுரைக்க, அஃது அளவிறந்த ஏட்டிலெழுத இடங் கொடுத்து வளர்ந்து வருகையில், முருகக்கடவுள் ஆசிரியமூர்த்தமாக வந்து சேவையருளி "இப்பனுவல் சொல்லிய திருவாதவூரரே திரு வாசகத்திற்குப் பொருள் சொல்லாமற் சிற்சபையே அதற்குப் பொரு ளெனக் காட்டியிருக்கவும், இப்போது உரையிட் டடங்குமோ?" எனத் திருவாய்மலர்ந்தருளலும், சிதம்பரதேவர், "பெண்பால் வேண்டுகோ ளால் இயைந்தவரை செய்யத் தொடங்கிய"தென் றிறைஞ்சினர். "ஆயின், அவ்வொருபனுவற்குப் பதவுரையாகச் சொல்க" என்றுகூறிக் கடவுள் மறைந்தருளினர். ஆதலால் அவ்வொரு பனுவற்கு மாத்திரம் சிதம்பர சுவாமிகள் பதவுரை யருளிச்செய்யக் கேள்வியுற்று, அம்மை ஆனந்தமடைந்து, அதன் பின்னர் நெடுநாளிருந்து ஓர் ஏகாலிப் பெண் ணுக்கு அநுக்கிரகஞ்செய்து, ஆசிரியர் கட்டளை மேற்கொண்டு கிளிய னூர்ப்பாதிரி என்னும் தலத்தை நண்ணி "நிஷ்டாநுபவம்" எனப் பெயர் பெற்றதொரு சாத்திரமியற்றி நிஷ்டாநுபூதியில் ஒடுக்க முற் றனர். சின்னாளான பின்னர் ஏகாலியம்மையும் ஒடுக்கமாயினர். இவ் விருவர் சமாதியும் அவ்வூரில் இந்நாளளவும் ஆராதிக்கப்பட்டுள்ளன.

இங்கு, சிதம்பரதேவர் அநந்த மான்மியங்களுடன் ஐம்பதாண் டிற்குக் குறையாமல் வீற்றிருக்கையில், சென்னைப்பட்டினத்திற்குப் பத்து நாழிகைவழிச் சேய்மையில் மேற்றிசையிலுள்ள பூவிருந்த வல்லி என்னும் ஊருக்கு உட்கிடையான கோவூரில் துளுவவேளாண் மரபிற் றோன்றிய திரிபுராந்தக முதலி என்பவர் புத்திரரும், பம்மல் வில்வராய முதலி தௌகித்திரருமாகிய சிவசங்கரர் என்னும் பெய ருள்ள ஒரு சிறு பிள்ளையை இளமைப்பருவம் மேற்படுவதற்கு முன் னரே திருப்போரூர் முருகக்கடவுள் ஆட்கொண்டருள, அவர் சென்னியிற் சடை உற்பத்தியாகி, மயக்கமடைந்தவர் போலவும், பித் துடையர் போலவும், தெய்வங்கோட்பட்டார் போலவும், ஓடியும் பாடி யும் கூத்தாடியும் தீர்த்தங்களில் மூழ்கியும் விபூதியுத்தூளனஞ் செய் தும் இவ்வாறு கோலாகலமாகவிருக்க, அவர் தந்தை அவற்றினுண்

மையை அறியாமல் ஆயுள் வேதியரைக்கொண்டு மணிமந்திர ஒளஷத முதலியவற்றைப் பிரயோகித்தும் அவை நீங்காமையால் அக்காலத்தில் ஜீரணோத்தாரணமாகி விளங்கியுள்ள திருப்போரூர்ச் சந்நிதியின் கடவுட்டன்மையையும் சிதம்பரதேவர் மஹாத்மியங்களையும் பலரும் சொல்லக்கேள்வியுற்றுத் தமது புத்திரருடன் திருப்போரூர்அடைந்து, சுவாமி தரிசனம் செய்துவருவாரானார். இங்ஙியமத்திற் சின்னாள் ஒழுகியும் அவை நீங்காதிருந்தமையாற் சிதம்பர தேவரிடத்திற்குச் சென்று வலம்வந்து, பணிந்து அஞ்சலிசெய்து புத்திரனை எதிரிற் கிடத்தி "சுவாமிகளே! இக்குழந்தைக்கு நேரிட்ட பிணியை நிவர்த்தித் தாளல்வேண்டும்" என்று வருந்தி முறையிட, அப்பிள்ளையின் குறிப்பை யுள்ளுணர்ந்த சுவாமிகள், அப்பிள்ளையின் தந்தையை நோக்கி, "அப்பா! இப்பிள்ளையை எடுத்துக்கொண்டு சந்நிதிக்குச் சென்றால் ஆறுமுகம் துணைசெய்யும்" என் றருளிச்செய்ய, அவ்வண்ணம் தந்தை குழந்தையுடன் அங்கடைந்து அபிஷேக முதலியவை செய்வித்து, கர்ப்பூராராதனை செய்யும்போது, முருகக்கடவுளைத் தோத்திரஞ்செய்ய, அந்நிலையில் அங்கிருந்தவருள் ஒரு சிறுவன்பேரில் கடவுள் ஆவேசமாகி, "இக்குழந்தையை நாம் ஆட்கொண்டோமாதலால் இது உனது பிள்ளையன்று; நமது பிள்ளையாகும். இப்பிள்ளையை நமது சந்நிதானத்தில் விட்டிடக்கடவை" எனக் கட்டளையிட, அது கேட்டவுடன் தந்தை மனங்களித்துப் புத்திரரைச் சிதம்பர சுவாமிகளிடத்தில் ஒப்புவித்து, விடைபெற்று நீங்கினார். பின்பு, சிதம்பரதேவர் அப்பிள்ளைக்கு வீரசைவ விதிப்படி சிவலிங்கதாரண முதலியவற்றை அநுக்கிரகித்துச் சிவசங்கரத்தம்பிரான்" எனப் பெயர் தந்து, ஒரு திருநீற்றுப்பையும் வேலாயுதமும் ஒரு தாம்பாளமும் பிள்ளை கையிற் கொடுத்து, குழந்தாய்! "நீ இன்றுதொட்டு ஆலயத்திற் சென்று நின்று பிச்சைஏற்றுத் திருப்பணிகளை நடத்திவருக" என்று கட்டளையிட்டார். பிள்ளை, "சுவாமி! அடியேன் சிறியன்; ஒன்றும் எனக்குத் தெரியாதே" என விண்ணப்பஞ் செய்தலும், சிதம்பரதேவர் "அப்பா! அங்கு வருவோர்களுக்கு "ஆறுமுகம் துணை" என்று திருநீறு தருவாயாயின், திருப்பணி தானே நிறைவேறும். அது செய்க" என்று விடையளிக்க, அவர் அதனை மேற்கொண்டு ஆலயத்திற் சென்றிருந்து இடைவிடாமல் முயன்று திருப்பணிகளையும் பிரமோற்சவம் முதலிய சிறப்புக்களையும் நடத்திவந்தனர்.

பரிஞைமத்துட் பூஜாமடத்தின் மேற்பால் கூடத்தொடுக்க வுறையுள் வழியாகச் சுரங்கம் செய்வித்து, அதற்குத் தென்பால் சமாதிஉள்ளறை கட்டுவித்து, அதில் நாடோறும் சுவாமிகள் நிட்டை கூடியிருந்தார்கள். சின்னாள் சென்றபின்னர் இடபரவி விசாக பௌர்ணமியில் தாம் சமாதியில் நிரதிசயாநந்த பரிபூரண நிலையிற் கலவாமற்கலந்துநிற்கும் செவ்விவருவதுணர்ந்து, அதற்குமுன்னாளாகியசுவாதிநக்ஷத்திரத்திற் சிவசங்கர தேவரை அழைத்தருளி, "அப்பா! இது முதல் இனி ஆண்டுதோறும் இச்சுவாதி நாளில் இங்கு மகேசுர பூஜை செய்வித்து மறுநாளாகிய விசாகத்தில் ஸ்ரீ சுப்பிரமண்யமூர்த்திக்கு மகாபிஷேகம் நடத்தி, சுவாமி திருமுகமண்டல உயரப்பிரமாணம் திருப்பாவாடையில் சுத்தான்னமும் பருப்பு நெய் பால் தயிர் பதார்த்த பக்ஷண பலவர்க்கங்களும்படைத்து நிவேதித்து ஆராதித்து தெரிசித்து வரக்கடவை. மூன்றாம்நாள் இத்தல விநாயகராகிய வேம்படி விக்நேசுரர்க்கு அபிஷேகம் நடத்தி (ஆண்டுதோறும் வைசாக பௌர்ணமியில் ஸ்ரீசுப்பிரமண்யசுவாமியின் மகாபிஷேக முதலிய சிறப்புக்கள் நிர்விக்நமாக நிறைவேறும்பொருட்டு நாம் பிரார்த்தனை செய்துகொண்டபடி) ஆயிரத்தெட்டுத் தேங்காய்களுடன் மகா நைவேத்தியம் முதலியவும் நிறைவேற்றக்கடவை. அது தொடங்கிப் பிரணவமலைத் தியாக கைலாசநாதர் கோயில் முதலிய சந்நிதிகட்கும் முறைப்படி அபிஷேகாதிகள் செய்வித்துத் தரிசனம் செய்துவரக் கடவை" என்று கட்டளை பணித்து அன்று மகேசுர பூஜையை நடத்திக்காட்டி மறுநாள் வைசாக பௌர்ணமி யாதலால் மகாபிஷேக முதலியவற்றைத் தமது கருத்தின்படி நடத்த மாணுக்கரை ஆலயத்திற்கனுப்புதலும்; அவர் அவ்வாறு அங்கு நண்ணி அச்சிறப்புக்களை நடத்திக்கொண்டிருக்கப் பரிஞைமத்தில் சுவாமிகள் வேலாயுத தீர்த்தத்தில் மூழ்கிச் சிவபூஜை யாராதனைகளை முடித்து ஒடுக்க உறையுளின்கண் நிஷ்டை கூடியிருந்தார்கள். இது நிற்க.

ஆன்மாக்களுக்கு நினைக்க முத்தி தருவதாய், முன்னொரு காலத்திற் பரமசிவமே அழற்பிழம்பாய் வளர்ந்தோங்கிப் பின் உகங்கட்குத் தக்கவாறு மலை வடிவாய் விளங்கியிருக்கின்ற திருவண்ணாமலையிற் சோணாசலதேவர் என்பவர், தமக்கு அருணகிரி மூர்த்தியே குருவாய் வந்தநுக்கிரகிக்கப் பெறல்வேண்டும் என்னும் வைராக்கிய விரத மேற்கொண்டு முப்பதாவது வயது தொடங்கித் தொண்ணூறு வயதாகுமளவும் நியமந் தவறாமற் கிரிபிரதக்ஷிணம் செய்து வருகின்றவர், ஒரு

தினத்தில் அடியண்ணுமலைக்கோயிற் புறத்து வரும்போது, சிவபெருமான் செயலால் தாகமிகுந்து மூர்ச்சையாயிட, அண்ணுமலையார் ஓர் ஆதிசைவராய்க் கலயத்திற் றண்ணீர் கொண்டுவந்து மூர்ச்சை தெளிவித்து, 'நீ இத்தீர்த்தத்தையுண்டு சோபந் தவிர்தி' எனலும், "அடியேன் அறுபதாண்டளவாய் அண்ணுமலையார் குருவடிவாய் வந்தருளல் வேண்டுமெனும் விரதத்தாற் கிரிவலம் வருகின்றேன்; அது கைகூடு முன்னர் ஜலபானம் செய்யத்தக்கதில்லை" என்று உறுதியாயுரைத்து மறுக்க, அது கேட்ட ஆதிசைவ வேதியர், "கலியுகத்தில் அண்ணுமலையார் குருமூர்த்தமாகவந் தருளிச்செய்வ தியலாது. ஆயினும், இத்தலத்திற்குக் குணதிசைக் கடற்கரைச் சாரலில் ஸ்ரீ பிரணவ சைலம் புறஞ்சூழ்ந்துள்ள யுத்தபுரியென ஒரு புண்ணியதல முள்ளது. அதில் சிதம்பரதேவர் என்றெருரு பெரியவர் உளர். அவர் நாளது திங்கள் விசாகநாட் பௌர்ணமியிற் பூரணதசை யடையவுள்ளார். அதற்குள் அங்குச் சேர்வையாயின் கோரியபடி அவரால் உபதேசம் கிடைக்கும்" என்று கூறி மறைந்திடச் சோணுசலதேவர், தாங்கண்ட வடிவம் சிவபிரானே என்றுணர்ந்து தியாநித்து, ஜலபானம் செய்து, அந்நிலையே தாழ்க்காமல் வழிக்கொண்டு, மலை காடு ஆறு முதலியன கடந்து திருப்போரூரில் விரைந்து வந்து (இங்ஙனம் நடந்ததை ஞானநோக்காலறிந்து தமது வரவு பார்த்திருந்த) சிதம்பரசுவாமியைத் தேடித் தரிசித்து வலம் வந்து சரணம் செய்யச் சிதம்பர சுவாமிகள் சோணுசல தேவரை நோக்கி "நீவிர் யாவர்?" என வினவலும், சோணுசலதேவர்,

### நேரிசை வெண்பா

எடுத்தசன னங்கடொறு மீன்றெடுத்த தாய்மார்
கொடுத்தமுலைப் பாலனைத்துங் கூட்டில்—அடுத்துவளர்
பன்னு கனைத்துயிலும் பாலாழி யுஞ்சிறிதாம்
மன்னுசி தம்பரதே வா.

### நெடிலடி விருத்தம்

நவகுணமு முக்குறும்பு நவைகள்மற் றனைத்துந்தீர்த்து
பவகுணஞ் சற்றுந்தாக்காப் பரமயோ கிகளாய்நின்ற
சிவகுணச் செல்வர்போற்றுஞ் சிதம்பர தேவாஎன்தன்
அவகுணம் போக்கியாள்வ தையநின் கடனதாமா

என்றிங்ஙனம் சொல்லித் துதித்து வணங்கச் சுவாமிகள்கிருபை

கொண்டு அவர் கோரியதை அநுக்கிரகம் செய்தனர். பின்னும் சோணா சல தேவர்.

### கழிநெடில் விருத்தம்

யானெனல் காணேன் பூரண அறிவின் யாதினும் இருந்தபே ரொளிநீ
தானென நிற்கச் சமத்துற வென்னைத் தன்னவ னாக்கவுந் தகுங்காண்
வானென வயங்கி நின்ற ஐம்பூத மார்க்கமா நெறிதந்து மாறாத்
தேனென ருசித்துள் ளன்பரைக் கலந்த செல்வமே சிவபெரு மானே.

என்று தோத்திரம் செய்தனர். அதுபோழ்து சிவசங்கரதேவர் ஆலயத்தில் மகாபிஷேகாதிகளை நடத்தித் தீபாராதனைக்குச் சிதம்பர சுவாமிகளை எதிர்பார்த்திருந்தபடி வாராமையால் அதனையும் நடத்துகையிற் பரிணாமத்திற் சுவாமிகள் சோணாசல தேவரை நோக்கி, "அப்பா! யாம் நிரதிசயாநந்த சமாதி புகுகின்றனம்; இக்கற்பலகையால் வாய்தலைமூடித் தளம்படுத்து. நமது சிவசங்கரத்திற்கு இதனை அறிவித்து அவன் ஆராமையைத் தீர்த்து, எமது வேண்டுகோள் தவறாமற்சொல்லியாங்கு நடத்திவரும்வண்ணம் ஸ்ரீ ஷண்முகமூர்த்தி துணை செய்யுமென்று தெரிவித்துப் பின்னர் நின்னூர்க்குப் போதுக" எனப்பணித்து அக்கணமே தமது பூஜா திரவியங்களுடன் நிலவறை வழியாகச் சமாதிஸ்தானத்தி லிறங்கி ஒடுக்கமுற்று நின்றனர். அச்சமயம் முருகக்கடவுள் சந்நிதியிற் கர்ப்பூர தீபாராதனை நடந்துவரும் வேளையாகலாற் சிதம்பர சுவாமிகள் ஆண்டவர் சந்நிதியில் அஞ்சலியஸ்தராய்த் தோன்றி மூலஸ்தானத்தில் மறைந்திடக் கண்டு, சிவசங்கரமூர்த்தியும் ஆலயத்திலிருந்த வேதியர் முதலிய பலரும் அற்புதமும் அச்சமும் ஆநந்தமுமுற்று 'ஹரஹர' என்கிற வாக்கிய முழக்கத்துடன் நமஸ்கரித்துப் பரவசராயினர். சிவசங்கரதேவர் ஆண்டவர் கைங்கரியங்களில் மற்றவையும் நிறைவுறுத்திப் பரிணாமத்தை நோக்கி வருகையில், ஏவலாளர் சிதம்பரசுவாமிகள் பூரணதசையி லமர்ந்த முறைமைகளைச் சொல்லக் கேள்வியுற்று அடங்கரிய ஆராமை மேற்கொண்டு பூரணானந்த வசத்தராய்க் கண்ணீர் ஆறாயோடித் ததும்ப உள்புகுந்து ஆசிரியர் ஒடுக்க முற்ற சந்நிதியில் நின்று இவ்வாறு சொல்லத் தொடங்கினர்:

### கழிநெடில் விருத்தம்

இக்கலி யுகத்தி லெழுந்த என்குருவே இன்பமே அன்பினுள் நிறைந்த
முக்கனி ரசமே முதிர்சுவை யமுதே மூதறி வேமறைப் பொருளே
சர்க்கரை யொடுகற் கண்டென ருசிக்குந் தயாளுவே தமியனேன் தனக்குத்
துக்கசா கரத்தைத் தொலைத்தருள் புரிந்தாய் தூயநீ எங்கொளித் தனையே. க

தாழ்விலாப் பொருளே தனிமுத லான தயாளுவே தற்பர வடிவே
வாழ்வினிற் சிறந்த வதுலமெய்ஞ் ஞான ஆநந்த அமுதமே அடிப்போர்க்
கேழ்வினைப் பிறவி இடர்களைந் தளிக்கும் இன்பமே எளியனேன் தன்னைச்
சூழ்வினை யனைத்துந் தொலைத்தருள் புரிந்த துணைவநீ எங்கொளித் தனையே.

இத்தலத் தினில்நின் னிணையடி யடைந்தோர்க் கின்பமே அன்பினில் உறைந்த, மெய்த்தவக் கொழுந்தே விளங்கும்ஆ ரமுதே வேதவே தாந்தநே சிகனே, சித்தமுள் மகிழ்ந்தென் செனனவெம் பகையைச் சிதைத்திடச் சிறிய னேன் தனக்குச், சுத்தமெய்ஞ் ஞான சுகமளித் தாண்ட சுகிர்தநீ எங்கொ ளித் தனையே. ந

அன்பினர்க் குரிய அங்கையிற் கனிபோல் அமர்ந்திடும் அமுதமே எவையுந்
துன்பெனக் காந்த தோன்றலே துணையே தொகுத்திடற் கரியவான் பொருளே
மன்பதைக் கெல்லாம் அருளும் நற்பரமே மாதவ வடிவமே அடியேற்
கென்பிறப் பிறப்பைத் தவிர்த்தருள் புரிந்த எந்தைநீ எங்கொளித் தனையே. ச

பத்திமை புரியப் பரிந்தெனை அழைத்துப் பணிந்துவா எனவெனக் கினிய
புத்திக ளுரைத்துப் போகென விடுத்துப் புன்மையேன் தன்மையை அறிந்து
நித்திய நிமல நிட்கள நிறைவே நீள்கிதி யேஅருட் குருவே
முத்தியங் கடலே முழுமறைப் பொருளே முதல்வநீ எங்கொளித் தனையே. ரு

ஐயனே அருளால் அடியனை ஆண்டிங் கருட்குரு என்னவீற் றிருந்த
துய்யனே துணையே தோன்றலே நிறைந்த சுகக்கட லமுதமே எனை இவ்
வையமீ திருத்தி வடிவினை மறைத்த வண்மையை அறிகிலேன் தமியேன்
உய்யுமா றருள்வாய் சிதம்பர தேவே ஓவென உள்ளநைந் தழுதார். சு

உடனே சோணுசலதேவர் ஓடிவந் தழைத்துக்கொண்டு போந்து ஆசனத்திருத்தி, அவர் ஆராமையை ஒருவாறு ஆற்றிச் சுவாமிகள் கட்டளையிட்ட முறைமையை விண்ணப்பம் செய்து, அமுதருத்து வித்துத் தாமும் அமுதுகொண்டு விடைபெற்றுத் திருவண்ணுமலையிற் சென்றிருந்தனர்.

## இரண்டாவது பட்டம்

# சிவசங்கரதேவர் சரித்திரம்

திவ்ய தேஜோமய அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சொரு பாநுபவராய்ச் சிதம்பரசுவாமிகளாதீனத்திலிரண்டாவது ஆசிரியராய் எழுந்தருளிய சிவசங்கரதேவர் திருப்போரூர்ச் சந்நிதியில் திரணை மாளிகையும் உட்பிரகார மண்டபமும் தெய்வயானை நாச்சியார் சந்நிதியும் அதன் திரணைமாளிகை மண்டபமும் முன்னர்ச் சிதம்பர சுவாமிகள் கட்டளை செய்திருந்தபடி ஆண்டவர் தரிசனார்த்தம் வருபவர்களுக்குத் திருநீறளித்துச் சேகரித்த திரவியங்களைக்கொண்டு செய்வித்தார். பின்பு திருமயிலையிலிருந்த பூம்பாவை வேலப்ப முதலியார் என்பவர் புத்திரபாக்கியம் வேண்டித் தம்மைச் சரணடைய, கிருபாநோக்கம் செய்து, 'ஆறுமுகம் துணைபுரியும்' என்று திருநீறளித்தருளப்பெற்றவாறு உண்டான புத்திரனுடன் அவர் தம்மிடத்திற்கு வந்து தரிசித்துத் தெண்டனிடக் 'குழந்தை வந்ததா?' என்ன, 'வந்தது சுவாமி' என்று புத்திரனைக் காண்பித்து வணங்க, அதற்குக், குமரகுருநாதன் என்று பெயரிட்டுத் தந்தையை நோக்கி 'இவ்வாலயத்தில் இருபத்து நாற்கால் மண்டபமும் கோபுரமும் கட்டுவிப்பை' என்று கட்டளையிட, அவர் களிகூர்ந்து, கோடியுருத்திரர் பூஜைசெய்து வரம்பெற்ற திருக்கழுக்குன்றத்து அந்நாளில் எழுந்தருளியிருந்த பேரம்பல சுவாமிகள் முன்னிலையில் இருபத்துநாற்கால் மண்டபமும், கோபுரத்திற்கு அடிப்படையும் அமைத்துக் கருங்கற் பணிவிடையை நிறைவேற்றுவித்தனர். அஃதவ்வளவில் நின்றது. அதன்பின் சரவண தீர்த்தமென்கிற வள்ளையாரோடையை நாற்சதுரப் பெருந்தடாக மாக்கிக் கருங்கற் படிக்கரை கட்டுவித்துப் பிரணவசைலமென்னும் திருப்போரூர் மலைமேற் சிறிதாயிருந்த ஸ்ரீ பாலாம்பிகை சமேத தியாககைலாஸநாதர் ஆலயத்தைத்திருமயிலைத்தையனுயகமுதலியாரால்விசாலமாக இயற்றுவித்துக் கும்பாபிஷேக முதலியவை நடத்திச் சிவாலயத்தில் திரிகால பூசைகள் எக்காலமும் நடக்கும்பொருட்டு இள்ளலூர் இடையன் குப்பம் என்னும் இரண்டு சுரோத்திரிய கிராமங்களையும் அம்முதலியார் தானமாகக் கொடுக்க, ஏற்றுத் தேவகாரியங்களை நடாத்திவந்தனர். முன் சிதம்பரசுவாமிகள் சாந்தலிங்கசுவாமிகளியற்றியகொலைமறுத்தல் என்னும் நூலுக்கு உரையிட்ட கருத்திற்கேற்பத், 'திருப்போரூரில்

உள்ள பிடாரி மாரியம்மை முதலிய தேவதைகட்கு ஜீவ ஹிம்சையாகிய பலிகள் யாதொன்றும் செய்யக்கூடாதென்றும், அவைகளுக்குப் பதில் உளுந்து தேங்காய் முதலியவற்றாற் பூசிக்கத்தக்கதென்றுங் கட்டளைசெய்து அதுமுதல் அவ்வாறாட்சி செய்துவந்தனர். ஒருநாள் கோவளம் நவாபு மருமகன் சிலருடன் திருப்போரூர் எல்லையில் ஒரு சோலையுள் வந்திருந்து ஓர் ஆட்டைச் சேதிக்க யத்தனித்ததைச் சிவசங்கரதேவர் தெரிந்து, "இத்தலத்தில் ஜீவவதை செய்யக்கூடாது" என்று ஏவலாளரைக்கொண்டு தடுத்துவிட்டனர். அது பொறாமல் அவர்கள் போய் நவாபு இடத்தில் முறையிட்டுக்கொள்ள, நவாபு அத்தலத்தின் மகிமையை நன்கு விசாரியாமல், சுவாமிகளைப் பிடித்துக் கொண்டு வரும்படி அமல்தாரனுக்குக் கடுமையான உத்தரவனுப்ப, அவன் சமயம் பார்த்திருந்து சுவாமிகளை அழைத்துக்கொண்டுபோக, அதிகாரி ஒரு சிறைப்புறமாகிய மேன்மாளிகையிற் சுவாமிகளைக் காவற்படுத்தினன். அச்செய்தி யறிந்த பக்கத்திலுள்ள கிராமத்தார்களுட் சில விவேகிகள், அதிகாரி, சுவாமிகளை ஹிம்சை ஏதாவது செய்வானோ என்றச்சுற்று அங்ஙனம் பிராணனை அவன் கையிற் போக்கடித்துக்கொள்வதிலும் சுவாமிகளே ஒடுக்கமாகுத லுத்தமமென்று ஒரு சீட்டு வரைந்து ஒரு பாத்திரத்தில் இட்டுத் தாகத்திற் கனுப்புதல்போல் ஒருமுதிஞர் வசத்தனுப்பக் காவற் சேவக ருத்தரவின்பேரில் அப்பாத்திரத்தைச் சுவாமிகளிடத்திற் சேர்த்துச் சங்கதியையும் உபாயமாகத் தெரிவித்தலும், அதிலிருந்த சீட்டை எடுத்துப் பார்த்துக்கொண்டு பாத்திரத்தை அவ்விருத்தர் வசங் கொடுத்தனுப்பிவிட்டுத் தருணம் பார்த்துப் பிராணத்தியாகஞ் செய்ய யத்தனித்து அக்காவல் மேடைச் சுவரிலிருந்த சிறு சாளர வழியாய்த் தாவி அச்சுவர்ப்புறத்துத் தரையில் வீழ, அத்தரை முட்புதராலும் தாழைச் செறிவினாலும் நிறைந்திருந்ததால், முட்களாற் புதைந்து திருமேனியிற் காயங்களாகி உபத்திரவமுற்றும் ஆண்டவனருளாற் பிராணன் நீங்காமல் தேகோபாதைகட்கு நிர்லக்ஷியமாக 'ஆறுமுகம் துணை' என்று சொல்லிக்கொண்டு மேற்றிசை நோக்கி அன்னுகாரமின்றி நடந்து, ஆறு குன்று காடுகள் முதலியன கடந்து, ஆறுகாடென்னும் ஷடாரண்யப் பதியிற் சேர்ந்து, தமது திருமேனியில் தைத்த முட்களையெல்லாம் உபாயமாகப் பறித்தெறிந்து, அப்பதியின் வடபால் வருகின்ற பாலிநதியில் மூழ்கிச் சிவபூஜையை முடித்து, அந்நதி தீரத்தில் ஒரு விருக்ஷ நிழலில் வீற்றிருந்தனர். இது நிற்க.

கோவளத்திற் சிறைச்சாலையிற் காவற்படுத்திய தம்பிரானைக் காணுமற் காவலாளர் எங்கெங்குந் தேடியுழல, ஸ்ரீசமரபுரி முருகக்கடவுள் சிவசங்கரதேவரைப்போல் உருக்கொண்டு அவ்வூர் நவாபு மனைவி நித்திரைபோகும்போது அவள்கனவிற் காவற்புறத்திலிருந்து வந்தாற்போலத் தோன்றி, அவள் வயிற்றில் வேலாயுதத்தாற் குத்தி மறைந்திட, அந்நிலையே அவட்கு வயிற்றுவலியுண்டாய்த் திடுக்கென்றெழுந்து மதிமயங்கி நடுங்கி நோய் சகிக்கமாட்டாமற் கோவென்று கூச்சலிட, நவாபு முதலியோர் கேட்டு வந்து பார்க்க, நவாபு தன் மனைவியை நோக்கி "ஏன் அழுகின்றனை?" என்ன, "நீர் சிறைக்களத்திற் காவற்படுத்தியிருந்த ஒரு காவித்தம்பிரான் எனது கனவில் வந்து அம்பினால் வயிற்றிற் குத்திப்போய்விடக் கண்டு விழித்துக்கொண்டேன் ; அது வயிற்று வலியாகத் தலைப்பட்டு பாதிக்கின்றது ; என்னுற் பொறுக்க முடியவில்லை" என்றலர, நாவாபு திடுக்கிட்டு நெட்டுயிர்ப்பெறிந்து "நீ அத்தம்பிரானைக் காட்டவல்லையோ?"என்ன, "இது செய்தது காவலிலிருந்த தம்பிரானே" என வற்புறுத்திச் சொல்ல, அக்கணமே "தம்பிரானைக் காவல்விடுவித்துக் கொணர்க" என் றேவலாளர்க்குரைக்க, அவர்கள் தம்பிரானைத் தேடிக் காணுமல் திகைத்து நவாபுக்குத் தெரிவித்தனர்.

அக்காலத்தில் ஆறுகாட்டு நவாபு மனைவி சொற்பனத்தில் முருகக்கடவுள் தோன்றி, அவள் இடப்பாரிசத்தில் வேலாற்குத்தி மறைய, அது, சூலை நோயாகி வருத்தத் துண்ணெண் றெழுந்து பயந்து பதைபதைத்து, நோய் கணந்தோறு மேலிட்டுச் சகிக்கக்கூடாமற் பெருங் கூச்சலிடக் கேட்டுத் தனது தலைவனை நவாபு முதலியவர்கள் ஓடி வந்து அவர் படும்பாட்டைப் பார்த்து அநுதாபப்பட, "யாரோ ஒரு காவித்தம்பிரான் என திடப்பக்கத்தில் அம்பாற் குத்தினதுபோலச் சொற்பனங்கண்டேன்; அது சூலைநோயாய் நேரிட்டு வருத்துகின்றது. என்னுற் சகிக்க வசமில்லை" என்றலறினள். நவாபு ஆச்சரியமும் அச்சமுங் கொண்டு அப்பதியிலுள்ள பண்டிதர்கள் மாந்திரர்கள் பக்கீர்கள் முதலானோரை வருவித்துக்கொடுத்த மணிமந்திர ஔஷதங்களால் ஒருபலனுங்கிட்டாமல் நோய் அதிகப்பட்டது. அவர்கள்,"ஐயா இது வியாதியைச் சேர்ந்ததன்று ; பில்லிசூனிய பைசாசப் பிரயோகமுமன்று ; ஆனுல் தெய்வத்தால் உண்டானதாய்க் காணப்படுகின்றது" என்று யோசித்துச் சொல்லினர். நவாபு, தம் மனைவியைப் பார்த்து, " அத்தம்பிரானைக் காண்பிப்பையா ?" என்ன " இப்பதியில் காவி

யுடைதரித்துள்ளவர்களையெல்லாம் என்முன் கொணர்வீராயின் கண்டு கொள்வேன்" என்றாள். நவாபு, உடனே சேவகர்களைத் திசைதோறும் உய்த்து அவ்வவ்வூரிலுள்ள அத்தன்மையோர் யாவரையும் வருவித்து ஒவ்வொருவராகக் காண்பிக்கையில் இவரல்ல ரிவரல்லரென(ப் பக்குவ தசையினர் கருவிகளை நியதி பண்ணுமாறு) நியதிசெய்யப் பின்பு ஆற்றங்கரையில் வீற்றிருந்த சிவசங்கர சுவாமிகளைச் சிலர் கண்டு பத்திமை யன்புடன் பிரார்த்தித்து அரசன்பாற் கொணர்ந்து மனைவிமுன்னர் விடுத்தனர். "இன்னோரே என்னைக் குத்தினவர்போல் காண்கின்றார்" என்று கூற, "இப்பரதேசி நமது பெருங்காவலுக்குள் வருவதென்பதும், மனைவியை அம்பாற் குத்தினதென்பதும் ஒருவாற்றானும் நம்பத்தக்க தன்று; இது, ஏதோ தெய்வத் தன்மையால் விளைந்த செயலேயன்றி, மற்றதால் நடந்திராது. ஆதலால் இவர்மேற் பழி சுமத்துவது நம்பாற் பிழையேயாம்" என மதித்து நவாபு அன்புடனே சுவாமிகளைநோக்கிப் "பெரியோரே, இஃது யாதுகாரணத்தால் நேரிட்டது" எனக் கேட்க, "ஐயா யாம் ஒன்றும் அறிந்திலோம்; யாம் திருப்போரூர் தேவஸ்தான தர்மகர்த்தரா யிருக்கின்றனம்; அதன் எல்லைக்குள் நமதுபெரியோர் ஆஞ்ஞையின்படி யாதொரு ஜீவவதையும்செய்யப் படாது. அப்படியிருக்கக் கோவளம் நவாபு மருமகன் சிலருடன் அங்கு வந்திருந்து ஓர் ஆட்டைச் சேதிக்க யத்தனித்தான்...." என முன் நடந்தவெல்லாம் முறையேசொல்லி, "நாம் இவண்வந்து ஆறுநாளாயிற்று. அங்கு இத்தனைநாளாய்ப் பூசையுமில்லை; நமக்கு அன்னாகாரமுமில்லை. நுமது மனைவிக்குப் பகவத் சங்கற்பத்தால் இந்நோய் சம்பவித்ததாகத் தோற்றுகின்றது" என்றனர்.

நவாபு, "பெரியவரே நீர்சொல்வதுண்மைதான். இப்பெண்ணுக்கு இப்போது நேரிட்ட உபத்திரவத்தைத் தீர்த்துவிட்டால் உங்கட்கு வேண்டுவவெல்லாம் தருகின்றனம்" என் றிரங்கிக்கேட்க, சுவாமிகள் அதற்கிசைந்தவராய், "ஆறுமுகம் துணைசெய்யும்" என்றோதித் தந்தருளிய திருநீற்றை நவாபு தங் கையிலேந்தி உட்கொண்டுபோய் மனைவிக்களிப்ப, அவள் நோய்நீங்கி நித்திரை செய்யச் சுவாமிகள் விடைகொண்டு முன்னிருந்த விருக்ஷநிழலில் இருந்தனர். பின்னரும் முருகக்கடவுள் முன்போல வந்து நவாபு மனைவியை வேலாற் குத்தினதால், மீண்டு வந்த நோயின் வருத்தம் பொறாமல் தன் தலைவனை அழைத்து "முன்னே நீறு கொடுத்த பெரியவருக்கு வேண்டுவதொன்றும் இதுகாறும் கொடுக்கக் கருதினீரில்லை யாதலால், மறுபடியும்

முன்போற் கணுக்கண்டு நோயுழக்கின்றனன். அது முன்னையிலும் அதி கரித்து வருத்துகின்றது" எனக் கதறினள். நவாபு மிகவும்பயந்து தன தமைச்சர் முதலிய அறிஞரால் அப்பெரியவரை வருவித்து ஆசனத் திருத்தி வேண்டுகோள் செய்து, "நீவிர் கேட்ட யாவையும் இங்கிலேயே தரத் தடையிராது" என்று உறுதியாய் உரைக்கச் சுவாமிகள், "நமது திருப்போரூர் ஆண்டவர் பூசைப்படித்தர உற்சவாதி கைங்கரியங்கள் எப்போதுங் குறைவின்றி நிறைவேறக் கிராம சுரோத்திரியங்கள் தர உடன்படுவீராயின் ஆறுமுகம் கிருபைபுரியும்" என்ன, அரசன் மிக்க மகிழ் சிறந்தவனாகித் திருப்போரூர், தண்டலம் இவ்விரண்டும் சுரோத் திரியமாகத் தானபத்திரம் செப்பேட்டில் எழுதிக் கொடுத்தனனாக, சுவாமிகள் அன்புகூர்ந்து ஸ்ரீ ஷண்முகமூர்த்தியைத் தியானித்துத் திருநீறளிக்க, அதனை அரசன் பத்தினி உட்கொண்டு அக்கொடுநோய் பற்றற நீங்கிக் களித்திருந்தனள்.

அதுகண்ட அரசன் மகிழ் தலைசிறந்து சுவாமிகட்குச் சிவிகை கவிகை யானை கவரி ஆலவட்டம் கோசிகப் பொற்படாம் அருகு தீவட்டி முதலிய சன்மானமும், சிவிகை சுமப்போர்கட்கு ஆவேதன மாக உப்பளங்களும் சுயாதீனம்பண்ணித் திருப்போரூர் தண்டலம் இக்கிராமங்களில் களவு சண்டை முதலியவற்றை விசாரணை செய்து தீர்மானிக்க அதிகார மேன்மையும் அங்கீகரிக்கும்படி வேண்டிக் கொண்டு கோவளம் நவாபுக்கும் உத்தரவு அனுப்புவிக்க, அங்கிருந்து சிவிகையில் ஆரோகணித்து வைதிக ஆடம்பரங்களுடன் ஸ்ரீ சமரபுரி யடைந்து ஆண்டவரை மனமொழி மெய்களால் வணங்கித் தரிசித்து பரிணுமத்திற்கு வந்து அமுதருந்தித் தொன்மைப்படியே சுவாமிகள் வீற்றிருந்தனர்.

அந்நாள்வரையிற் கோவள அதிகாரி மனைவிக்கு வயிற்றுவலி நிவாரணமாகாமலிருந்தது. ஆறுகாட்டு நவாபுவினிடத்திருந்து வந்த கட்டளையைக்கண்டு பயந்து, இவ்வண்ணம் கடவுளாக்கினையால் விளைந் தது என்று உள்ளுணர்ந்து, நவாபு திருப்போரூர் அடைந்து சிவசங்கர தேவரைக் கண்டுகொண்டு, தன் மனைவி கனவுகண்டு வயிற்றுவலி யடைந்திருக்கிற செய்திகளைச் சொல்லித்தனக்குவந்த கட்டளையையுங் காண்பித்துச் சுவாமிகளைச் சிவிகையாரூடராய் அழைத்துக்கொண்டு கோவளம்போந்து அந்நோயாளியைக்காட்டிவேண்டிக்கொள்ளச்சுவாமி கள், தேவாலயத்திற் கும்பாபிஷேகஞ்செய்ய வேண்டுவதாகையால் அதனை நிறைவேற்றத்தக்க உதவி புரிவீராயின் ஆறுமுகம் நிவர்த்தி

செய்யும் என்ன, அதற்குடன்பட்டுப் பிரார்த்தித்தபோது 'ஆறுமுகந் துணை' என்றுகொடுத்த விபூதியை வாங்கி உட்கொண்டவளவில் நோய் நீங்கிச் சுகமுற்ற மனைவியுடன் களித்திருந்து முன் சொல்லியபடி தக்க வாறு வேண்டும் உதவிகள் செய்யக் கும்பாபிஷேகத்தை நடத்தி அது முதல் ஆண்டவர் திருப்பணிகளை நிம்மதியாய்ச் செய்துவந்தனர். பின்னர், குத்தம்பாக்கம் முத்துமுதலியார் என்பவரால் தேர்நிலை மண்டபமும் சத்திரமும், கன்னிகைப்பேறு நயனப்ப முதலியாரால் தடாகமும் வேடர்பறி மண்டபமும் சத்திரமும், பைகொநல்லாசெட்டியாரால் மாடவீதி ஈசானதிசையில் சத்திரமும் தடாகமும் ஏற்படுத்தப் பட்டன. இவற்றுடன் வைசியர் செங்குந்தர் சேனைத்தலைவர் யாதவர் வன்னியர் சான்றார் கழியர் செம்படவர் வண்ணார் இவ்வகுப்பினரை ஆண்டவர் வருஷோற்சவ உபயகாரராக்கி, அவரவர்க்கும் மடங்கட்டிக் கொள்ள வேண்டுவனவாகிய நிலங்களும் விட்டுத் தேர்வாகனாதிகளுஞ் செய்வித்து ஆறுகாட்டு நவாபுவினிடத்திலிருந்து சில விசேஷங்களைப் பற்றி யுத்தரவும் வரக்கண்டு, அப்பால் திருமயிலைக் கபாலீசர்கோயில் தருமகர்த்தர் வேலப்ப முதலியார், சிங்காரவேலர் கோயில் தருமகர்த்தர் முத்தையப்ப முதலியார் இவர்களது நன்முயற்சியாலும் முருகக் கடவுள் திருவுளப் பாங்கினாலும் பூவிருந்தவல்லி என்னும் ஊரார் கலத்துக்கு இவ்வளவென்று மேரை பிச்சையாகக் கொடுக்கும்படி சம்மதித்து எப்போதும் அது நடந்துவரத் தேவஸ்தானத்திற்குத் தான பத்திரமும் தர வாங்கி வசித்திருந்தனர்.

கம்பாநதி சூழ்ந்துள்ளதும், பார்வதியாரது திருமுலைச் சுவடும் வளைத்தழும்பும் ஏற்ற திருவேகம்பம் என்பதும், சப்தபுரியுள் மிக்கதும்,பன்னிருபெயருள்ளதுமாகிய காஞ்சியில் ஒரு வேதியப்பிள்ளைக்கு முருகக்கடவுள் சொற்பனம் சாதிக்க, அப்பிள்ளை திருப்போரூர் அணுகிச் சிவசங்கர சுவாமிகளைத் தரிசித்துத் தனது சொற்பன நன்மைகளை விண்ணப்பஞ்செய்து பணிவிடை புரிந்துகொண்டு நூற்கேள்வி முயன்று வருங்காற் சுவாமிகளுக்குப் பூரணதசை அணுகினது தேர்ந்து, வீராகம விதிப்படி அப்பிள்ளைக்குச் சிவலிங்கதாரணஞ் செய்து, ஞானநுபூதி அநுக்கிரகித்து, ஆசாரிய அபிஷேகத்துடன் முத்துக்குமாரத் தம்பிரான் என்று தீக்ஷாநாமமும் தந்து, சந்நிதானத்திற் பட்டாபிஷேகமும் புனைந்து, "ஆண்டவர் கைங்கரியங்களை நாடோறும் விருத்தியாய் நடத்திவரக்கடவை" என்று கட்டளையிட்டு நிரதிசயாநந்த நிஷ்டாநுபூதியில் ஒடுங்கி நின்றனர்.

## மூன்றாவது பட்டம்

# முத்துக்குமார சுவாமிகள் சரித்திரம்

அகண்டாகார தேஜோராசியான பரமாநுபவராய் எழுந்தருளிய முத்துக்குமாரசுவாமிகள் சர்வ வாத்திய மண்டப மூலவறை மூன்று, வள்ளிநாச்சியார் சந்நிதானம் அடுத்த மண்டப மேடை இத்திருப்பணிகளை முற்றுவித்து, முன்கூறிய குமரகுருநாத முதலியார் என்னும் நவாபுகுழந்தை முதலியாரால் சிவசங்கரசுவாமிகள் நாளில் அடிப்படை கருங்கற்பணிமாத்திரத்தில் நின்றிருந்த திருக்கோபுர மேல்நிலைகளையும் கட்டுவித்தனர். பின்னர், ஆரியத்திலும் திராவிடத்திலும் ஆறுசாத்திரங்களும் பதினெண்புராணங்களும் இருபத்தெட்டாகமங்களும் இருநூற்றிருபத்துநான்கு உபாகம முதலிய பல ஞான நூல்களும் சேகரித்து அவற்றை மிருத்தியஞ்ஜெயசாஸ்திரி என்பவர் முன்னிலையில் ஆராய்ச்சிசெய்து வடமொழி தமிழ் ஆந்திரம் இவற்றிற் சில நாடகங்கள் இயற்றி, ஆலயத்தில் நவராத்திரி உற்சவத்தில் ஒன்பதுநாளிலும் நடக்கும்படி செய்வித்தவாறு அந்நாடகங்கள் நாளதுவரையில் மகாநவமிதோறும் தேவ கணிகையர்களால் சந்நிதியில் நடத்தப்பட்டு வருகின்றன.

அக்காலத்தில் இதற்குச் சற்றேறக்குறைய ௭௦-வது வருஷத்திற்குமுன் மைசூரைச்சார்ந்த சீரங்கபட்டணத்தைத் தன்வசப்படுத்தி ஆண்டிருந்த ஹைதர் என்னும் அரசனால் இந்நாடுகளிற் கலகம் நேரிட்டிருந்ததுபற்றி சுவாமிகள், ஆலய மூலத்தானத்திற் கற்றிரை சார்த்தி சாமானிய பூஜை மாத்திரம் நடத்தும்படி கோயிற்றுறையார்க்குக் கட்டளையிட்டு உற்சவமூர்த்தி முதலியவற்றை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்னபட்டினம் வந்து, அவற்றை முத்தியாலுபேட்டை மல்லீசராலயத்தில் இருத்திப் பாதுகாத்து,ஹைதர்கலகம் நடந்த ஐந்து வருடம்வரையில் அவ்விடத்திற்றானே வசித்து, பெத்துநாயக்கன் பேட்டை முதலிய பல இடங்களில் உள்ள பலபேரிடத்தில் ஐம்பது பொன் நூறுபொன் தொகையுள்ள திரவியங்களைப் பிச்சைபண்ணிச் சேகரித்துத் தேவஸ்தானத்திற் கனுப்பியும் ஆராதனை முதலியவற்றை நடத்தியும் இருந்தனர். அந்நாளில் ஹைதர் சேனை அதிகரித்துப் பலவூர்களிலும் கிராமங்களிலும் சென்று கொள்ளை யிட்டுக் கொண்டு ஸ்ரீ யுத்தபுரி மார்க்கமாகப் போகையில், ஆலயத்தைக்கண்டு

உள் நுழைந்து, ஆங்குள்ள பொருள்களைக் கொள்ளையிட எத்தனித்த லும், அச்சேனைகள் கண்கள் தெரியாமல் அவதியுற்று வாயிலும் மூக்கிலும் இரத்தங் கக்கிக்கொண்டு தரையில் வீழ்ந்து உருண்டு புரண்டு படாத பாடுபட்டுப் பின் திரும்பிப் பாராமல் ஓடிப்போய் விட்டன.

இதற்கு மத்தியிற் பிரணவ கிரியாலய சுரோத்திர கிராமங்க ளாகிய இள்ளலூர் இடையன்குப்பம் இவைக்குக் கிஸ்தி இராஜாங்கத் தார்க்குக் கிரமமாகக் கட்டிக்கொண்டுவரத் தப்பிப்போய் விட்டபடி யால், இராஜாங்கத்தார் அவ்வூர் இரண்டையும் தமது வயப்படுத்திக் கொண்டனர். அக்கலகம் நீங்க ஐந்து வருஷம் சென்றது. பின்பு முத் துக்குமாரசுவாமிகள் தேவாலயத்திற் கும்பாபிஷேகம் முதலியவற்றை நடத்துவித்தற் பொருட்டு வேண்டுவனவாகிய திருவாபரணங்கள் வஸ்திரங்கள் உபகரணம் முதலியவும் யாசகத்தாற் சேகரித்து முன் தாம் கொணர்ந்து சேமித்துப் பாதுகாத்திருந்த உற்சவமூர்த்தி முத லியவற்றையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்னைப்பட்டினத் திலிருந்து திருப்போரூர் சேர்ந்து, சகல விபவங்களுடன் கும்பாபி ஷேகத்தை முறையாய் நடத்தி, அதுமுதற் பழையபடி நித்திய நைமித்தியங்களைக் காலந் தவறாமல் நிறைவேற்றி வந்தனர்.

முன்னர் மலைக்கோயிலுக்குத் திருமயிலைத் தையனாயக முதலியா ரால் கிடைத்திருந்த மேற்கூறிய இரண்டு கிராமங்களும் சோர்வாயின படியால், மேற்படிமுதலியாரது சந்ததியார்அறிந்து சுவாமிகளிடத்தில் வந்துசரணஞ்செய்து "மேலிரண்டுகிராமங்களும் சோர்வடையப்பார்த் திருக்கலாமா?"வென்று விண்ணப்பஞ் செய்ய, "சுவாமிகள் நம்மாற் கூடியவரையில் முயற்சிசெய்தும் கலகஹேதுவாற் கைகூடாமற்போய் விட்டன" என்று அநுதாபத்துடன் இரங்கிக்கூற, அதற்கு அன்னோர் "சுவாமி! அவ்வாலய பூஜை இனி எவ்வாறு நடந்துவரும்?" என்ன, "இடையில் தடைபட்டதற்கு இரங்குவதிற் பயன் இன்று, ஆயின் எண்ணூறுவராகன் கிடைக்குமானால் இதுமுதல் எப்போழ்தும்தவறு படாமல் நடத்திவரத் தடையிராது" என விளம்பலும், அன்னோர் மனங் களிகூர்ந்து வணங்கி அத்தொகையைச் சுவாமிகள் வசம் கொடுத்துக் கட்டளைச்சாதனமும் பெற்றுக்கொண்டனர். அத்தொகை யைக் கொண்டு இந்நாள் வரையில் அச்சிவாலய பூஜை ஆராதனைகள் நடந்து வருகின்றன.

சில நாளாயின பின், சந்நிதானத்தின் வடபாலிற் சிறியதாயிருந்த வான்மீகீசர் கோயில், தேவியார் கோயில்களுக்குப் பெருவளூர் ஐயா முதலியாரால் கர்ப்பக்கிருகமும் அந்தரான மகாமண்டபமும் பிராகார மண்டபமும் நந்திபலிபீடமும் விசுவநாதராலயமும் முடிப்பித்து, தேவகாரியங்களைச் செய்து வருகையில், திருப்போரூரிலுள்ள திருவண்ணுமலை மடத்திலிருந்த ஒரு சைவராது புத்திரரை ஆதீனத்திற் சந்தானமாக அங்கீகரிக்கும்படி ஸ்ரீ சுப்ரமண்யம் தமது சொற்பனத்தில் வந்து கட்டளையிட்டு மறைந்தருளியது. அங்ஙனமே முத்துக் குமாரசுவாமிகள் உடனே அப்பிள்ளையை வருவித்து லிங்கதாரணம் முதலியவும் ஆசாரிய அபிஷேகமும் சந்நிதியிற் பட்டாபிஷேகமுஞ் செய்து, “ சிவசங்கரத்தம்பிரான் ” என்று தீக்ஷாநாமமுந் தந்து, “தேவஸ்தான கைங்கரியத்திருப்பணிகளை நாடோறும் மேன்மையாய் நடத்திவரக் கடவை” என ஆஞ்ஞைசெய்து நிரதிசயாநந்த நிஷ்டாநுபூதியில் நீக்கமில்லாமல் நின்றனர்.

பின்பு, தலத்திலுள்ளோர் சிவசங்கர சுவாமிகளைச் சிவிகையில் ஆரோகணிக்க இருத்திக் கிராமப் பிரதக்ஷிணஞ் செய்வித்து வணங்க, சுவாமிகள் அருள்புரிந்து பரிணுமத்தில் வீற்றிருந்தது.

---

## நான்காவது பட்டம்

# சிவசங்கர சுவாமிகள் சரித்திரம்

தேஜோமயாநந்த அகண்டாகார நிஷ்டாநுபவராய் எழுந்தருளிய சிவசங்கர சுவாமிகள், தமது ஆசிரியர் ஆஞ்ஞையின்படி சுவாமி கயிங்கரியங்களை முறையுறச் செய்து வருங்கால், உற்சவ மூர்த்தி சந்நிதியில் மகாமண்டபம் கட்டுவித்து, சர்வ வாத்திய மண்டபத்திற்கு அஸ்திபாரம் அமைத்து, முக்குதிரைக்கால் இரண்டு, ஒற்றைக் குதிரைக்கால் இரண்டு, சாதாக்கால் நான்கு இவற்றை நிறுத்தி, மூன்று பத்தி கருங்கற் பணியைமாத்திரம் முடித்து, ஏழாம்நாள் உற்சவத்திற்காகப் புதிய இரதம் ஒன்றும் செய்வித்தனர்.

அதன்பிறகு, சுவாமிகள் தாம் சம்பாதித்த சில பூஸ்திதிகளின் பலத்தினுலும், பூவிருந்தவல்லி ஊரார் கொடுத்துவந்த நெற்பிச்சையினுலும், தண்டலம் திருப்போரூரில் வரும் மேல் வாரத்தினுலும், தாம் மற்றும் செய்துவந்த சில தகுதியுள்ள வியாபாரத்தினுலும் கோயிற்

காரியங்களை நடத்தி வந்ததுமன்றி, ஆடிமாதக் கிருத்திகை உற்சவமும் இரதோற்சவமும் மூட்டைக்கார வைசியர்கள் செய்துவரும்படிக் கொடுத்து, அவர்களால் உச்சிக்கால பூசைக் கட்டளை நடந்துவரவும் ஏற்படுத்திப் பொன்வேய்ந்த மயில்வாகனமும் இயற்றுவித்தனர். பிறகு, சான்றோர்களைக்கொண்டு ஆலயத்திற்கெதிரில் பதினாறுகால் மண்டபமும், மாடவீதி அக்கினி மூலைக்குத் தென்பால் வணிகர்களைக் கொண்டு ஒரு மண்டபமும் உண்டாக்கினர்.

இங்ஙனம் நடந்து வருகையில், திருவல்லிக்கேணி நவாபு செங்கற்பட்டுத் தேசத்தைக் கம்பெனியாருக்கு ஜாகீராகக்கொடுத்துவிட்டபடியால், அதனைக் கம்பெனியார், மிட்டா ஏற்பாடு செய்து ஏலம் போட்டபோது, பூவிருந்தவல்லி ஊரார் கொடுத்துவந்த நெல் வரும்படியை மேல்வாரத்திற் சேர்த்துக்கொண்டு ஒருவாறு திரவிய ரூபமாகக் கொடுத்துவந்தனர்.

ஒரு நாளிரவிற் சிவசங்கர சுவாமிகள் சொற்பனத்தில் ஸ்ரீ சுப்பிரமண்யம் ஆசாரிய வடிவாய்த் தோன்றி, "அப்பா, தென்திசையிலிருந்து ஒரு வேதியப்பிள்ளை ஈன்றாளுடன் வருகின்றான். அப்பிள்ளையை வரவழைத்து இத்தேவஸ்தானப் பணிகளை நடத்துவதற்கு உரித்தாக்கிக் கொள்க" எனப் பணித்து மறைந்தருள, அவ்வாற்றானே சுவாமிகள், ஏவலாளரைச் சதுரங்கபட்டினம் வரையிற் போய்க் காத்திருந்து அன்னோரை அழைத்து வருமாறு செலுத்த, அவர்கள் அக்கணமே வழிக்கொண்டு செல்லுகையிற் பவளக்காரன் சாவடிக்குச் சமீபமாக அவ்விருவரும் வரக்கண்டு, அவர்களை அழைத்துவந்து சுவாமிகளிடத்தில் விடுத்தனர். அதுபோழ்திற் சுவாமிகள் அப்பிள்ளையை நோக்கி, "அப்பா, நீதானா இச்சந்நிதானத்திற்குப் புத்திரனாக வந்தனை!" என்றதிசயிக்க, அக்குழந்தை ஓடிவந்து சுவாமிகளது ஆசனத்தின்பேரி லிருக்க, சுவாமிகள் அற்புதமுற்று, அதன் ஈன்றாளை நோக்கி, "அன்னே இக்குழந்தையை ஸ்ரீ சுப்பிரமண்ய மூர்த்தி ஆட்கொண்டபடியால், இவன் உமது புத்திரன் அல்லன்; நமது புத்திரனாகுமாதலால், நீர் உமதிருக்கைக் கேகுவீராக" என்று கூறிச் சில திரவியங் கொடுத் தனுப்பிவிட்டுப் பிள்ளைக்குச் சிவலிங்கதாரணம் செய்து, 'முத்துக்குமாரத் தம்பிரான்' எனத் திருப்பெயரிட்டு, வடமொழி தமிழ் ஆந்திரம் இவைகளைப் பயிற்றிப் பாதுகாத்து வர, அப்பிள்ளை சுவாமிகளை எப்போழ்தும் நீங்காமலிருந்துகொண்டு ஆண்டவர் காரியங்களை நடத்தி வருகையில், துலாமதியில் ஸ்கந்தசஷ்டி சூர

சம்ஹார உற்சவத்தில் வண்ணார மடத்துக் கருகே ஆண்டவர் வரும் போது, சிவசங்கர சுவாமிகளுக்கு மார்பில் நோய்காண, அவர் பிள்ளையை நோக்கி, "அப்பா ஆண்டவருடன் நீ வருக" என்று கட்டளையிட்டு விரைவாய் உக்கிராணம் வருகையில், அதிக சோர்வடைந்தது கண்டு, ஏவலாளர் அக்கணமே சுவாமிகளைச் சிவிகையிலேற்றிப் பரிணாமத்திற் கொணர்ந்திடலும், சுவாமிகள் பரிபூரண தசையை நண்ணினர்.

---

ஐந்தாவது பட்டம்

## முத்துக்குமார சுவாமிகள் சரித்திரம்

முத்துக்குமாரசுவாமிகள், ஸ்ரீசுப்பிரமண்யசுவாமி திருவருளாற் கைங்கரியங்களைத் தமது பூர்வாசாரியர்கள் நடத்தியவைக் கிணங்க நடத்திவருகையில், சென்னைப்பட்டினம் வைசிய குலோத்துங்க நமசிவாய செட்டியாரைக் கொண்டு வாகன மண்டபமும், காழுசெட்டியாரால் ஆதியிற் சிறியதாயிருந்த வேம்படிவிநாயகர் கோயிலை விருத்தி செய்து கர்ப்பக்கிருகம்அந்தராளம் மண்டபம் திருமதில் முதலியவும் கட்டுவித்தனர். இதன்பின்பு சுவாமிகளுக்கு தேகத்தில் வைசூரி கண்டு அதனால் நோயதிகரிக்க, ஸ்ரீமுருகக்கடவுள் தமது கனவில் தோன்றி, "செம்பாக்கமென்னும் ஊரில் ஒருபெரியவர்-கூன்முதுகினர்-வீரசைவ மரபினர் - உப்பிலாப் புசிப்பினர் - இவ்வகையினரா யிருக்கின்றவரை ஆதீனத்திற் குரியராக்கிக் கொள்க" என்று குருமூர்த்தமாகித் திருவாய்மலர்ந்தருளலும், சுவாமிகள் அதுபோழ்தே கோவிற்றுறையாரையனுப்பி அவரை அழைக்க, அம்முதியோர் தாம் வயோதிகராதலால் தம்மா லாகாதென்று தடுத்ததைக் கேள்வியுற்று, முத்துக்குமாரா சுவாமிகள் மனவருத்தத்துடன் ஆண்டவரைத் தியானித்துக்கொண்டிருந்து ஒடுக்கமுற்றனர். அற்றை இரவில் ஸ்ரீ சுப்பிரமண்யம் அம்முதியோராகிய செம்பாக்கப் பரதேசியின் கனவில் தோன்றி, அவர் முதுகிலறைந்து, "நமது சந்நிதியின் கைங்கரியங்களை நடத்தும்பொருட்டு உன்னை ஆட்கொள்ள நாம் ஆஞ்ஞை தந்திருக்கவும்,நீ அதனை மறுத்தனையன்றோ?" என்றுரைத்து மறைந்தருளலும், அந்நிலையே அம்முதியோருக்குக் கூன்மறைந்திட உணர்ந்து, துண்ணென மனத்திலச்சமும் ஆனந்தமுமுற்றுச் சில திரவியத்துடன் வழிக்கொண்டு, திருப்போரூர்

வந்தனர். அவரை அத்தலத்தினர் அழைத்துக்கொண்டு வந்து சந்நிதியிற் பட்டாபிஷேகம் முதலியவும் செய்து, 'சிதம்பரத் தம்பிரான்' என்று திருப்பெயர் புனைந்து, சிவிகையில் ஆரோகணிக்க இருத்திப் பிரதக்ஷிணம் செய்வித்துத் தோத்திரிக்க, அவர் பரிணமத்திலெய்தி வீற்றிருந்தனர்.

---

## ஆறுவது பட்டம்

# சிதம்பரத்தம்பிரானவர்கள் சரித்திரம்

சச்சிதாநந்த சொரூபாநுபவராய், சாக்ஷாத்கார சிவசுப்ரமண்ய மூர்த்தி கிருபையாற் பிறவிக்கூனுகிய உடற்குற்றம் ஒழிந்த சிதம்பரத் தம்பிரானவர்கள், தேவார்ச்சனைப் பிரவர்த்தகராய்த் திருப்பணிகளை வேதாகம முறைப்படி நிறைவேற்றி வந்தனர். மேற்சென்ற சித்திரபாநுவருட முதலாக மூன்றுண்டுவரை சம்பவித்த பஞ்சகாலத்திலும் சுவாமி கயிங்கரியங்கட்குச் சிறிதும் தவறு வாராமலும், தலத்தினருக்கு அன்னபானுதிகளிற் குறைவு நேரிடாமலும் பாதுகாத்து வருகையிற், பித்தவேடு என்னும் பதியிலிருந்து சைவ மரபினராகிய ஒரு பரதேசி வந்து தம்பிரானவர்களை அடுத்திருக்கச் சில நாளில் ஸ்ரீ சுப்பிரமண்யம் தம்பிரான் கனவில் தோன்றி உரைத்தருளியவாறு, பித்தவேட்டுப் பரதேசிக்கு லிங்கதாரணம் முதலிய தீக்ஷையும் ஆசிரிய அபிஷேகமும் பட்டாபிஷேகமும் புரிந்து, 'சிவசங்கரத் தம்பிரான்' என்னுந் திருப்பெயரால் ஆதீனத்திற்குரியவராக்கிச் சின்னுளில் ஒடுக்க தசையை அடைந்து நின்றனர்.

## ஏழாவது பட்டம்

# சிவசங்கரத் தம்பிரானவர்கள் சரித்திரம்

சிவசங்கரத் தம்பிரானவர்கள், சிதம்பர சுவாமிகள் உரிமை மேற்கொண்டு, தமது முன்னோரது தொன்மைப்படியிற் சிறிதும் பிறழ்வின்றி, ஆலயத்தில் நித்திய நைமித்தியங்களை நடத்தி வந்து, சர்வவாத்திய மண்டபத்தைப் பூர்த்திசெய்ய எண்ணங் கொண்டு, முயன்று, அதற்கு மாவலிபுரத்திலிருந்து முக்குதிரைக்கால் ஒன்றும் சாதாக்கால் ஒன்றும் கொண்டுவந்து சேர்த்துவைத்துத் திருப்பணி தொடங்க யத்தனித்த காலத்தில், தேகவசதி அநுகூலப்படாமல் ஸ்ரீ சுப்பிரமணியமூர்த்தி திருவடி நிழலில் ஐக்கியமாகி நின்றனர்.

---

## எட்டாவது பட்டம்

# முருகேசத் தம்பிரானவர்கள் சரித்திரம்

சர்வலோக காரண சாக்ஷாத்கார ஸ்ரீ சுப்பிரமண்ய உபாசன விரதராய், வல்லக்கோட்டை என்னுந் தலத்திலிருந்து பதினாறு வயது தொடங்கி அன்னமில்லாமற் பால் பழம் புசிப்பவராய், அத் தலத்திற் சுப்பிரமண்ய சுவாமி கோயிற் றிருப்பணி செய்துகொண் டிருந்தார் ஒருவர். ஓரிரவில், அவர் கனவின்கண் முருகக்கடவுள் எழுந் தருளி, "நமது திருப்போரூர்ச் சந்நிதிக்கு வருக" எனக் கட்டளை பணித்து, அத்தருணமே தேவஸ்தான அதிகாரிகட்குஞ் சொற்பன மாகி அச்செய்தியை உணர்த்திட, அவ்விரதியானவர் அப்போழ்தே திருப்போரூர் வந்து சேர்ந்தனர். அவரைத் தலத்துளோர், தேவஸ் தான அதிகாரிகளைக்கொண்டு பரிணமத்தில் அழைத்துப்போய், ஆராத் திய வேதியர்களாற் சிவலிங்கதாரணம் முதலியவை செய்வித்து, 'முரு கேசத்தம்பிரான்' எனப் பெயர் தரித்துச் சிவிகையின்மேற் பிரதக்ஷி ணம் புரிவித்து, மடாலயத்தில் விடுத்தனர். அவர் தேவகாரியங்களைக் கிரமமாக நடத்திக்கொண்டுவந்து, ஆலயப்புறத் திருமதிலும், மதிற்கு உட்பிரகார வாயுமூலை வரையில் தளவரிசையும், திருமடைப்பள்ளிச் குத் தளமும், உக்கிராணமும் இயற்றுவித்தனர்.

இரண்டாம் பட்டத்தாராகிய சிவசங்கர சுவாமிகட்கு ஆறுகாட்டு நவாபு கொடுத்திருந்த திருப்போரூர், தண்டலம் இவற்றின் சுரோத்திரிய தானசாதனமாகிய பர்வானவை அக்காலத்தில் ஹெட்அஸிஸ்ட்டண்ட் கலெக்ட்டர் மக்ளீன்துரை என்பவர், முருகேசத்தம்பிரானிடத்திலிருந்து வருவித்துக் கொண்டனராதலால், அது நாளது வரையில் அவ்வதிகாரிகளிடத்திலேயே இருக்கின்றது.

அதன்பின், திருமயிலையிலிருந்த வீரசைவ விசிஷ்டராகிய நஞ்சையர் சகோதரர் லிங்கையர் என்பவரது புத்திரரும் மகாதேவையர் தௌகித்தரருமான வீரபத்திரையர், இல்வாழ்க்கையில் விரக்தராய்த் துறவு மேற்கொண்டு, திருப்போரூரிலுள்ள வள்ளையாரோடை என்னும் சரவண தீர்த்தத்திற்கு நீராழி மண்டபங் கட்டுவிக்க உத்தேசித்து, அஸ்திபாரம் பதித்து நடத்திவருகையில், நந்தனவருடத்தில் நேரிட்ட பஞ்சத்தால் திருப்பணி தடையாயிற்று. அதனால் வீரபத்திரையருக்குத் தேகம் அசவுக்கியமாகியிருந்த உபத்திரவத்தால் வருந்தும்போது, ஒருநாளிரவில் "முருகக்கடவுள் மயில்வாகனரூடராய் எழுந்தருளி, வீரபத்திர ஐயர் சயனித்திருந்த வீட்டினுட்சென்றதாக" அவர் பக்கத்தில் துயில்கொண்டிருந்த ஒரு வயோதிக பரதேசி யம்மையும், அவர் மனைவி மீனாக்ஷியம்மையும் சொற்பனங் கண்டு விழித்து, "அவருக்கு வியாதி நீங்கிற்று; இனி பிராண பயமில்லை; ஸ்ரீ சுப்பிரமணியமே இங்கெழுந்தருளி நிவர்த்தி செய்தது" என்று சொல்லப் போதுவிடிந்த பின்பும் அது நீங்காமல் வருந்துகையில், இந்நாளில் திருமயிலையின் வடபால் தெய்வீகத் தன்மை யடைந்து விளங்கியிருக்கின்ற அப்பர் என்னும் ஒரு பெரியவர், அந்நாளில் வீரபத்திரையர் கிருகத்திற்கு வந்து, அவரை நோக்கி, "நீவிர் திருப்போரூர் நீராழி மண்டபப் பணியை யாதுபற்றி நடத்தாதிருந்தீர்?" என்ன, அப்போது ஐயருக்குப் பேசுதற்குச் சக்தியில்லாதிருந்தபடியால், "அத்திருப்பணியை நடாத்தவேறுவரும்படி இன்மையாலும் க்ஷாமகாலமாகலாலும் தடையாயிற்று" என்று தரையில்எழுதிக் காட்ட, பெரியவர் "இவ்வியாதி ஒழிந்து சவுக்கியமானல் இனிமேலாயினும் அதனை நிறைவேற்றப் போதுவீரா" என்று கூற, "அவ்வாறு புரிதற்குத் தடையில்லை; ஆனல் இல்லாளிருப்பதால் தடையற நடத்தக் கூடுவதில்லையே" என்றெழுதித்தெரிவிக்கப், பெரியவர், "தேகம்பிரிந்தால் இல்லாளையாவர்காப்பார்?" என்ன, ஐயர் "சுவாமிகாப்பார்" என்றெழுத, அதற்கு அப்பர் "அக்கடவுள் எப்போதுங் காத்தருள்வர்" என்று

ரைக்க, ஐயர் "அவ்வாறாயின் இதுபோழ்தே இல்லாளுக்கும் அடியே னுக்கும் பந்தநிவிர்த்தியாகுமானால் அத்திருப்பணியையேற்றுக்கொள்ள லாம்" என்றெழுதிக்காட்ட, பெரியவர் ஐயரது மனைவியை நோக்கித் "தாயே உமக்கு மாங்கல்ய பிக்ஷை வேண்டுமா, வேண்டுவதில்லையா?" எனக் கேட்க, அந்த அம்மை அவர் பாதத்தில் வீழ்ந்து "சுவாமி! அடி யாளுக்கு மாங்கல்யபிக்ஷையே வேண்டும்; மற்றை யாதொரு சம்பந்த மும் வேண்டுவதின்று; ஆனால், அடியாளுக்கு இரண்டுவரம் கொடுத்தல் வேண்டும்; அவற்றுளொன்று பிக்ஷமாத்திரம் அடியாள் கொடுக்க, அவர் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்பதும், மற்றையது அடியாள் முன்னர் ஐக்கியமுற்றால் அவரே அடக்கஞ்செய்யவும், அவர் அவ்வாறு ஐக்கியமுற்றால் அடியாள் அடக்கம் செய்யவும் வேண்டு மென்பதுமே யாம்" என்று அதிக ஆராமையுடன் சொல்லிக்கொள்ள, பெரியவர் ஐயரை நோக்கி "இவற்றிற்குத்தரம் யாது?" என்ன, ஐயர் "இவ்வாறே மனைவி நம்மை நுமது திருவடியில் வைத்து நமஸ்கரித்து ஒப்புவித் தால் ஒப்புகொள்ளுகின்றேன்" என்றெழுத, மனைவியும் அவ்வண்ணமே பரிவுடன் புரிந்து, சரணஞ்செய்து நிற்க, பெரியவர் ஐயருக்குத் தமது திருக்கரத்தால் வெண்ணீறு தரித்து "நீவிர் எழுந்து ஸ்நானஞ்செய்து சிவபூஜையை முடித்துப் புசிப்புக் கொண்மின்" என்ன, அக்கணமே அந்நோய் நீங்கியது. ஐயர் நியமங்களை முடித்துக்கொண்டு பெரிய வர்க்கமுதளித்துத் தாமும் அருந்தினர். "பெரியவர் இதுமுதல் திருப் பணியை நடத்தும்" என்று கூறலும், ஐயர் "நாளொன்றிற்கு ஒரு ரூபாய் கிடைத்தாலன்றிப் புசிப்புக் கொள்ளத் தக்கதில்லை" என்று சூளுரைத்து, அவ்வாற்றானே நாடோறும் பொருள்கிடைக்கக் கருங்கற் பணி மண்டபம் நிறைவேற்றிவர, முருகேசத் தம்பிரானவர்கள் அம் மண்டபத்திற் சுவாமியை எழுந்தருளப்பண்ணித் தெப்பவுற்சவம் தரி சித்தல் வேண்டுமென்று ஒருநாள் சொல்ல, விரைந்து அம்மண்டபப் பணியை நிறைவேற்றி, அத்திருவிழாவும் நடத்தத் தெரிசித்துத் திரு மயிலையில் ஐயர் மீண்டு வந்திருந்தனர்.

அங்ஙனமிருக்குங் காலத்தில், முருகேசத் தம்பிரானவர்கள் தமக் குச் சரீரமெலிவுற்றது நோக்கித் தாழம்பூர்ப் பாளயப்பட்டு போத்து ரெட்டியார், வேங்கடகிருஷ்டப்ப நாய்க்கர் என்பவர்க்குத் தமது தேக மெலிவைத் தெரிவித்து, "நமது ஆதீனத்திற்குரித்தாய், ஆண்டவர் நித்திய நைமித்தியங்களைச் சிறப்புற நடத்திவரத்தக்க ஒரு பிள்ளை யைத் தாங்களே யோசித்து வருவித்துத் தரல்வேண்டும்" என்ன

அப்பொழுதே அவ்விருவருள் வேங்கடகிருஷ்ணப்பநாயக்கர் பிரயாண மேற்கொண்டு சென்னைப்பட்டினத்தை அடுத்த சிந்தாதிரிப்பேட்டை சேர்ந்து, அங்கு முத்துவீரப்பமுதலியார் கிருகத்தில் வந்திருந்து, "திருப்போரூர் நீராழிமண்டபத் திருப்பணியைநடத்துகின்றவர் யார்? அவர் எங்கிருக்கின்றனர்?" என்ன, முதலியார் "அன்னாரை யான் அறிந்துளேன்; அவர் வசிப்பது திருமயிலை" என்றுகூறி, நாயக்கரது வேண்டுகோளால் அன்றிரவிற் பத்து நாழிகைக்குத் தம்பாலிருந்த ஒரு பெரியவரிடத்தில் "ஐயா இங்கே ஒரு பிரபு வந்திருக்கிறார். நாளை உதயத்தில் அவர் தம் ஊர்க்குப் பிரயாணமாகின்றார். ஆதலால் இப்போதே இங்கு வந்தால் திருப்பணிக்கு யாதேனும் தக்கபிரயோசனங் கிடைக்கலாம் என்று வீரபத்திரையருடன் சொல்லும்" என்று சொல்லி விடுத்து, ஐயரை அவ்விரவில் வருவிக்க, நாயக்கர் ஐயரை நோக்கி, அஞ்சலித்துத் தாம் திருப்போரூர்த் தேவஸ்தான ஆதீனத்திற்கு வரல் வேண்டுமென்ன, "ஐயா அது நம்மாலாவதில்லை" எனவும், "நாம் முயன்றிருக்கின்ற திருப்பணி நிறைவு பெறின் அஃதே அமையும்" எனவுஞ்சொல்லி மீண்டு, தமதிருக்கையில் நண்ணி அமுது கொண்டு,தெருத்திண்ணைமேல்தனியாய்இருந்து, அவ்விரவில்தம்மைச் சிந்தாதிரிப்பேட்டைக்கு வருவித்து வினவிய விடயத்தை நினைத்து ஆகுலமுற்று,ஆண்டவரை எண்ணிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், சாக்கிர சொற்பனம்போலப் பிராணபீதியான ஒரு கனவு கண்டு விழித்துக்கொள்ள, ஐயருக்கு ஆராமையுங் கண்ணீரும் உண்டாகி உடலங் கம்பிதமுற்று வருந்த, அந்நிலையில் மார்புநோய் உண்டாயிற்று. அந்நோயால் உட்கார்ந்திருக்கவும் சயனித்துக்கொள்ளவும் நிற்கவும் நடக்கவும் வசனிக்கவுங் கூடாமல் கொடிய தொந்தரை யுண்டாகி, முருகக்கடவுளைத் தியானித்து, "ஐயனே ஈதென்ன ஆச்சரியம்! தேவரீர் சந்நிதானம் வர, அடியேன் தெரியாமையால் தடை சொல்லினேன் என்றோ இந்நோயை எனக்கேவிச் சோதிக்கின்றீர்! அஃதே திருவுளப் பாங்காயின் இக்கணமே வருகின்றேன். இத்துன்பத்தை நிவர்த்தி செய்தருளும்" எனப் பிரார்த்தித்துத் திருநீறெடுத் தணிந்துகொள்ளலும்,சுடரோன் முன் பனித்திவலைபோல் வியாதி இருந்த இடந் தெரியாது நீங்கிற்று.

வேங்கடகிருஷ்ணப்ப நாயக்கர், முருகேசத்தம்பிரானவர்களிடத்தில் வந்து, "நீராழிமண்டபத் திருப்பணி நடத்தி வருகின்றவரை ஆதீனத்திற்கு வருக" என்றழைத்தால் வரல் இசையாதென மறுக்

கின்றனராகையால், தேவரீர் தயைசெய்து அவருக்கு ஒரு திருமுகம் உய்த்தல் வேண்டும்'' என்று சொல்லி விடைகொள்ளத் தம்பிரானவர்கள், அவ்வண்ணம் ஐயருக்கொரு திருமுகமும், தாழம்பூர்க்கு மீண்ட நாயக்கருக்கொரு திருமுகமும் அனுப்புவித்தனர். அவற்றை இருவரும் வாங்கி வாசித்து விடயங்கள் தெரிந்தாராயினர்.

இங்கு முத்துவீரப்ப முதலியார், மளிகை அருணாசல முதலியாருடன் முற்கூறிய அப்பரென்னும் பெரியவரிடத்திற் சென்று, இதுவரை நடந்தவைகளைத் தெரிவித்துத் திருப்போரூர் ஆதீனம் தர்மகர்த்தத்வத்தை அங்கீகரிக்கும்படி வீரபத்திரஐயரவர்கட்குக் கட்டளைசெய்தல்வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, அத்தருணத்தில் ஐயரும் அங்கு வந்தனர். அப்பர், ஐயரை நோக்கி ''நீவிர் திருப்போரூர்த் தேவஸ்தான ஆதீனத்திற் குடன்படலாமே!'' எனச், சுவாமி ''அடியேன் சல்லியமின்றியிருக்க நினைத்தாற்பெருங்கவலையின்வயப்படுத்துவிக்கலாமோ!'' என்ன, பெரியவர் அவரைத் தனியே அழைத்துப்போய் ''நமக்கு ஜன்மாந்தர புண்ணிய பலாநுபவ மணுகியதால் அதனைத் தடுப்பதரிது; ஆதலால் நீவிர் அதற்குச்சம்மதிக்கவேண்டும்'' என்றும், ''உடன்படாவிடின் அதுபற்றி இன்னும் நமக்குப் பிறவிக்கிடமாகும்'' என்றும் உரைத்து, '' வாழ்வு வந்தபோதென்று மகிழாதே, தாழ்வு வந்தபோதென்று தளராதே '' என்பதனையும் சொல்லி விடைதர, வேங்கடகிருஷ்ணப்ப நாயக்கரும் தமக்குவந்த திருமுகத்தைக் காட்டி அழைக்க, அக்கணமே ஐயர், ஊர்தியின் மீது நாயக்கருடன் போரியின்கண் எய்திப் பரிணமத்தை நண்ணி முருகேசத் தம்பிரானவர்களைக் கண்டுகொள்ள, தம்பிரானவர்கள் ஐயரை நோக்கித் தமக்கு ''ஒடுக்கதசை நேரிட்டிருப்பதால் தேவாலயத்தையும் இவ்வாதீனத்தையும் பரிபாலனம் செய்ய நீவிர் உரியராதல் வேண்டும்'' என்று ஆஞ்ஞைசெய்ய, ஐயர் அதற்கு இசைந்தாராக, அதுபோதில் ஆசாரிய அபிடேகமும் சந்நிதியிற் பட்டாபிடேகமும்* புரிவித்து 'முத்துக்குமாரத் தம்பிரான்' எனத் திருப்பெயரிட்டுச் சிவிகைமேல் கிராமப் பிரதக்ஷிணஞ் செய்வித்து, முறைப்படி திருமடத்திற் கொணர இருந்தனர். பின்னர், முருகேசத் தம்பிரானவர்கள் சின்னாளில் ஸ்ரீ ஷண்முகமூர்த்தி திருவடியில் ஐக்கியமாயினர்.

* சாதாரணஞு வைகாசிமீ.

ஒன்பதாவது பட்டம்

# முத்துக்குமார சுவாமிகள் சரித்திரம்

அகண்டபரிபூரண நிரதிசயாநந்த பரம ஞானசொரூப சித்தராய் முத்துக்குமாரத் தம்பிரானவர்கள், தம்முன்னவர்க்குச் செய்ய வேண்டுவனவாய கிரியையாதிகளைச் செய்துமுடித்தனர். பின்பு அவர் ஆலயத்திற் சென்று சுவாமியைத் தரிசித்துத் தாமும், ஸஹதரும கர்த்தராகிய கடம்பூர் சுரோத்திரியதார் சபாபதி முதலியாரும், ஸ்தானிகர்களும் சேர்ந்து கோயிற் சொத்துக்களில் அக்காலத்தில் இருந்தவைகளைப் பார்வையிட்டு, கைங்கரியங்களையும் மடாலய தருமத்தையும் நடத்திக்கொண்டு வந்தனர். அப்போது ஆலயத்தில் நாயகர் சந்நிதி, வள்ளிநாச்சியார் சந்நிதிகளின்மேல் ஸ்தூபிகளிற் செடிகள் முளைத்திருந்தன. அவைகளையெல்லாம் வேர் களைந்து திருத்தித் தளஞ்செய்து, அவற்றின் மேடைமண்டபம் கருங்கற்பணிமாத்திரமாகி யிருந்ததைத் தளம்படுத்தி, சர்வ வாத்திய மண்டப சபை முதலானவைமேல் ஒன்றரைகஜ உயரம் சுண்ணத்தால் செங்கற்பொடி நிரைத்துத் தளவரிசை புரிவித்துப் பிறகு திருமயிலை மன்னன் சபாபதி முதலியார் என்பவரைத் தாம் முன் நடத்திவந்த நீராழிமண்டபப் பணியை நிறைவேற்றும்படி ஏற்படுத்த, அவரால் அத்திருப்பணி குறைவற நடந்தது.

பின்பு தம்பிரானவர்கள் நாளொன்றுக்குப் பத்துரூபா கட்டளை நியமித்துக் கொண்டு சர்வவாத்திய மண்டபமேடையிற் சில தூரங் கருங்கற்பணி நடந்து மற்றது சும்மாவிருந்ததற்கு உத்திரம், போதிகை, பாவுக்கல் முதலியவை முடிப்பித்து, அதற்குமேல் தளவரிசையுஞ் செய்து, சுண்ணந் தீற்றுவித்து மாவலிபுரத்திலிருந்து முக்குதிரைக்கால் ஒன்றும் ஒற்றைக் குதிரைக்கால் ஒன்றுமாகிய இரண்டனையும் அதிக பிரயாசையுடன் வருவித்து ஆலயத்திற் சேர்த்தனர்.

அன்றியும் தம்பிரானவர்களது முயற்சியினாலும், யாசகப் பிரயோசனத்தினாலும், முற்கூறிய மன்னன் சபாபதி முதலியாரது உபக்கிருதியாலும் சர்வவாத்தியமண்டப அசுவஸ்தம்பங்களின் திருப்பணிகள் கிரமக்கிரமமாக நடந்தேறி வந்தன.

சந்நிதானத்தில் அந்தராளம், மகா மண்டபம், திரணைமாளிகை, அநந்தபத்தி, சக்கரஸ்வாமி, ஆறுமுகமூர்த்தி, தெய்வயானை நாச்சி

யார் சந்நிதிகளும், திரணை மாளிகை, மகா மண்டபம், இருபத்துநாற் கால் மண்டபம், வான்மீகீசர் கோயில் முதலியவைக்கும் தளவரிசை ஸ்தூபி முதலிய மேற்றிருப் பணிகள் யாவும் திருத்திச் சாத்துப் படி மண்டபத்திற்குக் கருங்கற்பணி யாவும் நடத்தி, வெளிப்பிர காரம் அநந்தபத்தியிற் சில பாகத்தைத் தடுத்துத் தளஞ்செய்து மடைப்பள்ளி முற்றுந் தளம்பண்ணி உக்கிராணத்தைப் புதுக்கிப் பழுதறத் தளமும்செய்து, பிரணவசைலாலய கெற்பக்கிருகம் ஸ்தூபி அந்தராளம் மகாமண்டபம் தேவியார் பாலாம்பிகை சந்நிதான முத லிய முன்னிலமாகி யிருந்தவைகளை யெல்லாம் சீர்செய்து, ஸ்தூபி தள வரிசை முதலிய புதியனவாக இயற்றி, அவ்வாலயத்தின் வெளிப் பிரதக்ஷிண மார்க்கம் நெருக்கமாக இருந்ததைக் குண்டுக் கற்களால் ஓரங்கள் சரிந்திடாமற் கட்டி விசாலமாக்கிப் பிரதோஷ உற்சவ முத லிய பஞ்சபர்வ கைங்கரியங்களை நடத்தி வந்தனர். ஸ்ரீ சுப்பிர மணிய சுவாமி பிரமோற்சவத்தில் உபதேச உற்சவமும், சஷ்டி விசாகத் திருவிழாக்களும் விசேடமாக நடப்பித்தனர். இன்னும், வாகன மண்டபப்பணியையும் நடத்தினர்.

மடாலயத்தருகில் வேலாயுத தீர்த்தக் கரையிற் சுந்தரவிநாயகர் கோயில் தட்டோட்டுக் கட்டிடத்தில் இருந்ததனைத் திருத்திக் கருங் கற் செங்கற்களால் கெற்பக்கிருகம் மகாமண்டபம் நிருமித்துப் பரிஞ மத்திலுள்ள ஒடுக்கச் சந்நிதானத்திற் சுற்றுத் திருமதிலும், கீழ்த் திசையில் வாய்தற்படியும் அலங்கார மண்டபமும், சிதம்பர சுவாமி கள் சந்நிதி நாற்கால் மண்டபத்திற்குச் சுற்றிலும் பதினறுகால் மண்டபமாக ஒரு சபையும், மேல்தளமும் சிகரமும், கீழ்த்தளவரிசை யும், நாலாவது பட்டத்துத் தம்பிரான் சமாதியில் நாற்கால் மண்டப மும் கட்டுவித்தனர்.

இக்கலி ஆண்டு நாலாயிரத்துத் தொளாயிரத்தறுபத்துமூன்றில் நிகழும் சாலிவாகனசகாப்தம் ஆயிரத்தெழுநூற்றுஎண்பத்துநான்கில் இயன்ற சித்தார்த்திவருடத்தில் "முருகக்கடவுளது திருவருளால் ஒரு தினத்திற்கு முப்பத்தைந்து ரூபா கிடைத்தாலன்றிப் புசிப்புக் கொள்வதில்லை" என்று விரதமேற்கொண்டு, எளிதிற் செய்து முடித் தற்கேலாத கும்பாபிஷேகத்தை வேதாகம விதிப்படி ஆண்டவர்க்குச் செய்யவேண்டித் தமது சங்கற்பத்தின்படி நேராது அநேக முறை பட்டினி நேர, அப்போதெல்லாம் இராயப்பேட்டை சுப்பராய முதலி யார் குமாரர் தெய்வசிகாமணி முதலியார் தம்பிரான் சுவாமிகளது

விரதத்தைக் கேள்வியுற்று, அவ்வாறு பட்டினி நேருங்காலங்களில் அது தீரும்படியாக உபயோகமாகக் கடவதென்று சங்கற்பம் செய்தெடுத்துவைத்த ரூபா ஆயிரத்தையும் அன்றன்றைக்கும் முப்பத்தைந்து வீதம் கொடுத்தனுப்ப, விரதந் தவறுமற் பட்டினி தீர்ந்தும், சென்னை முதலிய நகரத்திலும் குன்றத்தூர் தையூர் கடம்பூர் செய்யூர் சூணும்பேடு செங்கற்பட்டு முதலிய பற்பல நத்தங்களில் சஞ்சரித்தும் அவ்விரதப்படி சேகரித்த அநந்த நிதியைக்கொண்டு, கும்பாபிஷேகத்தைத் துன்மதி யாண்டு உத்தராயணம் மிதுனரவி பூர்வபக்ஷம் எ-ஆம் நாள் புதன்கிழமை சுவாதிநாளில் யாவரும்வந்து தரிசித்து ஆநந்தமுறும்படி அநந்த விபவங்களுடன் விசேஷ வைத்தியநாதகுருக்கள் முதலிய ஆதிசைவராதி அநேக பிராமணோத்தமப் புனிதர்களால் முறை வழுவாது நடத்தி, நாடோறும் சமாராதனை, மகேசுர பூஜை, தக்ஷிணை இவற்றிற் குறைவின்றிச் சூணும்பேடு ஆறுமுக முதலியார், வேதாசல முதலியார், கொன்றை அருணசல முதலியார், கவர்னர் பட்ளர் ஐயா முதலியார் குமாரர் கந்தசாமி முதலியார், திருவல்லிக்கேணி ஜவுளிக்கடை முத்தைய முதலியார், செங்கற்பட்டு ஜில்லா கோர்ட்டு வக்கீல் சுப்பராய பிள்ளை முதலிய அன்பினர் பலரும் அபிமானிக்க மண்டலாபிஷேகத்தை நிறைவேற்றினர்.

அந்நாளில், முன்னம் வடமொழியிலிருந்த திருப்போரூர் மகாத்மியத்தை ஆலயத்தில் மந்திர புட்பகைங்கரிய அலுவலில் இருந்த வேதசாஸ்திர பண்டித ஸாப்தீக பூஷணரான கிருஷ்ண சாஸ்திரியார் முன்னிலையில் உயர்துளுவ வேளாண் மரபினராய், வீரசைவாகம சிவார்ச்சன விரதராய், இல்லறத்தை வழுவற நடத்திப் பின் மனத்துறவு நேர்ந்தவராய், ஸ்ரீ யுத்தபுரிக்கு வந்து முத்துக்குமாரத்தம்பிரான் சுவாமிகளுடன் நீங்காமலிருக்கின்றவராய், அங்கு தரிசனார்த்தம் வருபவர்கட்கு (நமது சிதம்பர சுவாமிகளது ஆஞ்ஞையின்படி நடந்த சிவசங்கரதேவர்போலத்) திருநீறளித்து பரிணமத்தில் உள்ள சமாதித் திருப்பணி முதலியவற்றை நடத்துவதற் கநுகுண பூஷணராய் வசித்திருக்கும் விநாயக பரதேசியாரைக் கொண்டு மொழிபெயர்த்தெழுதிப் புரசை 'அஷ்டாவதானம்' சபாபதி முதலியாரால் விருத்தச் செய்யுளாகப் புராணமியற்றிக் கற்றுவல்ல பெரியோர் மதிக்கத்தக்க தமிழ்ப் புலமையும் சதுர்வேத சித்தாந்த ஞானநூல் சாஸ்திரத் தேர்ச்சியுடனே நிறையும் பொறையு மிக்கவரும், பிரமோத்தர காண்டம், ஸ்காந்தச்சுருக்கம், ஸ்ரீகழுக்குன்றபுராணம், திருவிரிஞ்சைப்

புராணம், இராமாயண முதற்பாகம்,நமது தவப்பேறாகிய சிதம்பரசுவாமிகள் பாடியருளிய பஞ்சாதிகார விளக்கம் இவை முதலிய பல நூல்களுக்கு உரையாசிரியரும், திருப்போரூர்ச் சந்நிதி முறையை நன்கு ஆராய்ச்சி செய்து ஆதியில் அச்சுப் பதித்தவரும், சென்னையின்கண் முன்னிருந்த காலேஜ் என்னும் கல்விச் சங்கத்தில் தமிழ்த் தலைமைப் புலமைநடாத்திப்பின்னர் பிரின்ஸபல் சதராமீன் என்னும் தருமநீதித் தவிசிலிருந்த வில்லியனூர்த் தாண்டவராய முதலியாரிடத்தில் இயற்றமிழ் பயின்றமேற்கூறிய அஷ்டாவதானம் சபாபதி முதலியாருக்கு ஆசிரியருமாகிய வித்வான் காஞ்சீபுரம் சபாபதி முதலியாரைக்கொண்டு பலர் முன் அப்புராணத்தை அரங்கேற்றி, வரிசைகள் நல்கி, அப்புராணம் இயற்றினவரது பிரதம உபாத்தியாயரும், புதுவையில் முன்னம் பிரசித்தராயிருந்த வீரசைவப் புனிதர் சின்னைய உபாத்தியாயர் மாணுக்கருமாகிய அச்சுதபிள்ளையிடத்தில் ஸ்ரீ சுப்பிரமண்யமூர்த்தி உபாசனையாற் கற்றுப் பயின்றுள்ள அஷ்டாவதானத்தை மண்டலாபிஷேக நிறைவுற்ற தினத்தில் ஆண்டவர் சந்நிதியில் அநேகர் காணச் செய்வித்து, அதற்கு முன்னுளிலும் பின்னுளிலும் ஷை அ. சபாபதி முதலியார் பாடியுள்ள திருப்போரூர் நான்மணிமாலை, சிலேடை வெண்பா, கலம்பகம், அலங்கார பஞ்சகம், யமக அந்தாதி, சதகம், பிரணவாசல சதகம், வண்ணங்கள், கீர்த்தனங்கள் இவற்றுட் சிலவற்றை அச்சுப்பதித்து அரங்கேற்றலும் செய்வித்தனர்.

பின்பு, குரோதனவாண்டில் தம்பிரானவர்கள் அநுமதியில் ஸஹ தருமகர்த்தர் கடம்பூர் வேதகிரி முதலியாரும்,சகோதரர் அப்பாசாமி முதலியாரும் திருப்போரூர்ப் புராணத்தைக் கீர்த்தனமாகப் பாடித் தருகவென, பு. அ. சபாபதி முதலியார் அவ்வாறு பாடி வருகையிற் புராணத்தில் வள்ளி தெய்வயானை நாச்சியார் திருமண வரலாறு சொல்லப்படாமையால், அஃது மிருந்தால் நன்றுதலால் ஸ்காந்தச் சுருக்கத்தையுங் கீர்த்தனையாகப் பாடிச் சேர்க்கவென்று தம்பிரான் அவர்களும் சில பெரியோரும் கூற, அதனையும் பாடியதில் வேணபடி தக்க முயற்சி செய்தனர். தம்பிரான் சுவாமிகளது ஆஞ்ஞையால் அவை அப்போது கற்பிக்கப்பட்டும் வந்தன.

தம்பிரானவர்கள், தொட்டிக்கலை - சிதம்பர முதலியார் குமாரர் சபாபதிமுதலியாரென்பவரை மகாநவமி உபயகாரராக நியமித்து அவ்வுற்சவத்தை வருடந்தோறும் மிகுந்த சிறப்பாக நடத்தி வந்ததுமல்லாமல், அவரைக்கொண்டு சந்நிதிக்கெதிரில் துவஜஸ்தம்பத்தைச்

சூழ வட்டவடிவாய அங்கக விசுததிர ஙகதது்ஙராறசவமாகத மரக் கால்கள் தாங்கும் மேற்பரப்பாகத் துத்திநாகத் தகட்டுப்பாய் வேய்ந்த ஒருசக்கரப்பந்தல் நிலையுற அமைத்து, இரசிதத்தகடுவேய்ந்த அச்சுவ ஊர்தியொன்று அவராற் செய்வித்து, நவராத்திரியில் அவ்வாகனத்தின்மேற் பரிவேட்டைத் திருவிழாவும் நிறைவேற்றி வந்ததுமன்றி, வடவண்டை மாடவீதியில் அவருக்கு நிலங்கொடுத்து பிரணவ சைலத்தின் கீழ்ச்சாரலில் ஓவர்சியர் அண்ணுமலை முதலியாரால் சத்திரங் கட்டுவித்தாற்போல், பலரும் வந்திளைப்பாறி யிருக்கச் சத்திரமும் கட்டுவித்தனர்.

சுக்கில வருடத்தில் மேற்கூறிய தொட்டிக்கலை சபாபதிமுதலியாரைக் கொண்டு இதுவரைகிலமாகி இல்லாதிருந்த துவஜஸ்தம்பம் பிரணவ கிரிக் கைலாசநாதர் சந்நிதியிற் பதித்து, அவரால் வெள்ளித்தகடு பதிந்த தொட்டிலொன் றமைவித்து, அவ்வாண்டு தொடங்கி உபயகாரர்களை ஏற்படுத்தித் தொன்றுதொட்ட முறையே பவனியாடல் முதலாக ஆனி மாதத்தில் பிரமோற்சவ நைமித்தியங்களும் செய்து வந்தனர்.

தம்பிரானவர்கள், விபவவருஷத்தில், திருப்போரூர்க்குக் குணகடற்கரையின் கண்ணதாகி விஷ்ணுதேவர் திருப்பதிகள் நூற்றெட்டுள் ஒன்றாகிய திருவிடந்தை, தென்பாலுள்ள மாவலிபுரம் இவற்றிற்கும், திருக்கழுக்குன்றத்திற்கும் நடந்த ஆலயத் திருப்பணிகளிலும் கும்பாபிஷேகங்களிலும் முறையே அத்தலங்களை அபிமானித்த உபய வேதாந்தப் பிரவர்த்தகர் வேங்கடாத்திரி சுவாமிகளும், சூ-ஆறுமுக முதலியார், ருத்திரகோடித் தம்பிரான் முதலானவர்களும் வேண்டுகோள் செய்யச் சகல்வித முயற்சியும் உதவியும் செய்து அவற்றையும் நடத்தினர்.

மேலும் தம்பிரானவர்கள், தமது பலவகை முயற்சியினாலும், பக்திமான்கள் புண்ணியவான்கள் முதலான உத்தமர்களைக்கொண்டும் ஸ்ரீ சுப்பிரமணியமூர்த்திக்கும் வள்ளிதெய்வயானை நாச்சியார்க்கும் அடுக்குப் பதக்கங்கள், மகரகண்டிகை, பொன்னரிமாலை, மணிக்கடகங்கள், தலைக்கோலம், ரத்நக்குதம்பைகள் முதலிய அநந்தம் பொன் மணித் திருவாபரணங்களும், வெள்ளிப் பாத்திரங்களும், கிளைவிளக்கங்களாதியவும் தேர்ச்சீலை முதலியவும் அமைவித்தது மல்லாமல் ஆண்டவர்க்குச் சில பூஸ்திதிகளும் சம்பாதித்து, உத்தியாவனம், பூந்தோட்டம், தடாகம் முதலியவைகளும் உண்டாக்கி வைத்தனர்.

இன்னும் முத்துக்குமாரத் தம்பிரானவர்கள் செய்த திருப்பணிகள் பல உள்ளன.

இவற்றுடன் திருப்போரூர் வெண்பா, அந்தாதி, கலித்துறை யந்தாதி, பிரணவ சைலமாலை, ஸ்ரீ சமரபுரிமாலை, யுத்தபுரிமாலை, பூஜாவிதியகவல், அநந்தகீர்த்தனங்கள் முதலிய பல கிரந்தங்களை நூதனமாக இயற்றி அரங்கேற்றி அச்சிற்பதித்து யாவர்க்கும் பத்திமை என்னும் பயிரை விருத்தி செய்துகொண்டு "ஆறுமுகம் துணை" என்று வசித்திருந்தார்.

*பிறகு, சிவசங்கரத் தம்பிரானவர்கள், தமக்குப் பின்னர் ஆண்டவனுடைய திருப்பணியை ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள் கட்டளையிட்டுள்ள முறைப்படியே தவறாது நடத்திச் செல்வதற்கு உரிய ஒருவரை நியமிக்க எண்ணினார். அப்போது, சுவாமிகள், தம்மைப் பிரியாது பணி செய்திருந்த ஒருவரே அதற்கு உரியாரென எண்ணி, அவருக்குப் பட்டாபிஷேகம் முதலிய செய்து, 'சிவசங்கரத்தம்பிரான்' எனத் தீக்ஷா நாமமுந் தந்து, அவரை ஆதீனத்திற்கு உரியவராக்கிச் சின்னாளில் ஸ்ரீ சுப்பிரமணியமூர்த்தியின் திருவடியில் ஐக்கியமானார்.

---

* இதுமுதல் காணப்படுவன இவ்விரண்டாம் பதிப்பிற் சேர்க்கப்பெற்றவை.

† ஒன்பதாம் பட்டம் ஸ்ரீ முத்துக்குமார சுவாமிகளை, திருமயிலை அப்பர் சுவாமிகள் கட்டளைப்படி, திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் ஆதீனபட்டத்தை ஏற்றுக்கொண்டு ஆண்டவனுடைய திருப்பணியை நடத்துமாறு அவரை மனமுவந்து விட்டுப் பிரிந்த அவருடைய மேன்மை பொருந்திய மனைவியார், திருமயிலையிலுள்ள தமக்குச் சொந்தமான மடம் ஒன்றை, திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகளுக்கு, தம் கணவனாரும் ஷை ஆதீனம் ஒன்பதாம் பட்டத்ததிபருமான ஸ்ரீ முத்துக்குமார சுவாமிகள் அவர்களிடம் தத்தஞ் செய்ததாயுள்ள சிலாசாசன வரலாறு வருமாறு:—

சர்வஹாதி தாதி சயாற்பத சாலிவாகன சகாப்தம் தளாஎய்க - கலியுகாதி சதுகூாருயஅ - பிறபவாதி சேதாபதம் வருஷம் ருயரு செல்லாநின்ற நளவருஷம் தைமாதம் யகூஉ சுக்கிரவாரம் பஞ்சமிதிதி உத்திரட்டாதி நட்சத்திரம் சித்தமாப யோகபவனைபை ரிஷபலக்கினம். இந்த சுபதினத்தில் திருமைலாப்பூரிலிருக்கும் வீரபத்திர அய்யர் பாரியாள் மீனாச்சியம்மாள் செய்துவைத்த சிலாசாசனம் என்னவென்றால்: என் மடமானது திருமைலாப்பூரைச் சேர்ந்த குசப்பேட்டையில் அப்பர்சுவாமி கோவிலுக்கும் ரோட்டிற்கும் கிழக்கு, குருசாமி முதலியார் தோட்டத்திற்கும் சந்து வழிக்கும் மேற்கு, அனுமந்தராயக் கோவிலுக்கு வடக்கு, சுமைதாங்கிற்கு தெற்கு இது மத்தியிலிருக்கிற கட்டுக்கோப்பாகிய மடமும் அதினுடைய தர்மம்

## பத்தாவது பட்டம்

# சிவசங்கர சுவாமிகள் சரித்திரம்

ஆசிரியர் கட்டளைப்படி பரிணுமத்தில் வீற்றிருந்த ஸ்ரீசிவசங்கர சுவாமிகள், முருகப்பெருமானுடைய திருப்பணிகளைச் செய்துவருங் கால், சிறிது குறைவுற்றிருந்த சர்வவாத்திய மண்டபத்தைப் பூர்த்தி செய்தார்; துவஜஸ்தம்பத்துக்குச் செப்புத்தகடு வேய்ந்தார்; மடாலயத் தில் ஸ்ரீ சிதம்பர சுவாமிகளுடைய திருவுருவை அமைத்தார்; அங்கே சுவாமிகளுக்கு ஆண்டுதோறும் வைகாசி விசாகத்துக்குமுன் 10-நாட் கள் திருவிழாச் செய்து, ஒவ்வொருநாளும் சுவாமி தேவஸ்தான பதி னாறுகால் மண்டபத்தை எய்தி, மாலை மரியாதைகளையும் தீபாராதனை களையும் பெற்று, மாடவீதி வலம் வருமாறு ஏற்பாடு செய்தார். இவர் (1903) சுபகிருது ஆண்டு பங்குனி மாதம் பூரநக்ஷத்திரத்தில் ஐக்கிய மானார்.

---

## பதினோராவது பட்டம்

# சிவப்பிரகாச சுவாமிகள்

ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் பிறந்த ஊர் திருமழிசை. இவர் சாந்தலிங்க சுவாமிகள் ஆதீனத்தைச் சேர்ந்தவர்; குருலிங்க சங்கம பத்தியிற் சிறந்தவர்; கந்தவேளைக் கருத்தில் இருத்தியவர். இவர், சென்னை தொண்டைமண்டல உயர்தரப் பாடசாலையில் தமிழ்ப்புலமை நடாத்தி யிருக்குங்கால், ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் ஆதீனத்திற் குரியார் இவரேயென செங்கல்பட்டு நீதிபதியால் தெரிந்தெடுக்கப்பட்டார். பிறகு கிராமத்தார், சாதாரண ஆண்டு தைமாதம் 26-ஆந் தேதி யில் இவருக்கு ஆசாரிய அபிஷேகம் முதலியவும் சிவிகைமீது

---

கிராண்டு நிலமும் சகிதபகஷாண மடங்கலும் என் மனப்பூர்வமாய் ஸ்ரீ அகி லாண்டகோடி பிரமாண்ட நாயகராகிய திருப்போரூர் ஸ்கந்தசுவாமியார் தேவஸ்த்தான தர்மகர்த்தரும் (ஒன்பதாவது) 9-வது பட்டம் முத்துக்குமார சாமி தம்பிரானிடம் ஸ்ரீ சிதம்பரஸ்வாமியாருக்கு தத்தம் செய்துவிட்டேன். ஷை ஆதீனத்தார் சந்ததிகள் சந்திர சூரியர் உள்ளவரைக்கும் அனுபவித்துக் கொண்டு ஷை யூர் திருவிழாக் காலங்களில் தண்ணீர்பந்தல் முதலிய தர்ம பரிபாலனம் நடத்திவர வேண்டியது.

கிராமப் பிரதக்ஷிணமுஞ் செய்வித்து, ஆதீனத்தில் அமர்த்தினர். பத்தாவது பட்டத்தார் காலத்துத் தொடங்கப்பெற்ற இடர்ப்பாடுகள் பல இவர் காலத்தும் வளர்ந்து முடிவுறுமையால், இவர் ஒன்றுஞ் செய்ய இயலாதவராய் இருந்தனர். பின்னர், ஸ்ரீமத் - சுவாமிகள் தமக்கு ஒடுக்கதசையுறுவது கருதி, ஆதீனத்திற்குத் தக்கார் ஒருவரைத் தேடிக்கொண்டிருந்தார்; அப்போது, தென்னாட்டினின்றும் துறவு பூண்டு சென்னை நண்ணினவராய், முருகநாதனுடைய பக்தராயிருந்த ஸ்ரீ சண்முக சுவாமிகள் என்பவரை அழைத்துவந்து, (1927) பிரபவ ஆண்டு ஆவணி மாதத்திலே சிவலிங்கதாரணமும், ஆசாரிய அபிஷேகமுஞ் செய்து, "சிதம்பர சண்முக சுவாமிகள்" என்று தீக்ஷாநாமமுந் தந்து, சிவிகைமீது கிராமப் பிரதக்ஷிணமுஞ் செய்வித்துப் பரிணமத்தில் அமர்த்தியபின், சின்னாளில் கந்தவேள் திருவடியிற் கலந்தனர்.

---

## பன்னிரண்டாவது பட்டம்

# சிதம்பர சண்முக சுவாமிகள்

ஸ்ரீ சிதம்பர சண்முக சுவாமிகள் தம் முன்னவர்க்குச் செய்ய வேண்டிய கிரியையாதிகளைச் செய்து முடித்துத் திருப்பணிகளைக் கவனித்து வருங்கால், பல ஆண்டுகளுக்கு முன்னர்த் தொடங்கப்பெற்ற நீதித்தல விவகாரங்கள் முடிவுற்றன. சுவாமிகள், மடாலயத்திலுந் தேவஸ்தானத்திலுஞ் செய்யவேண்டிய திருப்பணிகளைச் செவ்வனே செய்து வருகின்றார். மடாலயம் மராமத்து செய்யப்பெற்றதோடு, ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் ஆலயத்திலே, தெற்கு நோக்கியிருந்த சிவலிங்கத்தைக் கிழக்கு முகமாகத் திருப்பிச் சந்நிதானம் அமைத்து, அழகிய கருங்கல் மண்டபம் கட்டுவித்து, கிணறெடுத்து வைத்தார். ஒன்பதாம் பட்டத்தினராய முத்துக்குமார சுவாமிகள், தொட்டிக்கலை சிதம்பர முதலியார் குமாரர் சபாபதி முதலியாரென்பவரைக்கொண்டு துவஜஸ்தம்பத்தைச் சூழ வட்டவடிவமாக மாத்திரைல் அமைத்த சக்கரப்பந்தல் பழுதுற்றது கண்ட சுவாமிகள், சென்னை, நியோ

ராஜராஜேஸ்வரி லஞ்ச்ஹோம் சொந்தக்காரர் மகா-ள-ள-ஸ்ரீ V. S. கங்காராம் நாயுடு அவர்களைக் கொண்டு, பழைய பந்தலுக்குப் பிரதியாக இரும்பினாலும், கருங்கல் சுண்ணம் முதலியவற்றாலும் நிலை பேறுற புதிய தொன்றை அமைத்து வருகின்றார்.

| சிதம்பர சுவாமிகள் பரம்பரை பெயர் | | திருநக்ஷத்திரம் |
|---|---|---|
| க. சிதம்பர சுவாமிகள் | ... | வைகாசி, விசாகம். |
| உ. சிவசங்கர சுவாமிகள் | ... | மார்கழி, பூரட்டாதி. |
| ௩. முத்துக்குமார சுவாமிகள் | ... | ஆனி, பூராடம். |
| ௪. சிவசங்கர சுவாமிகள் | ... | ஐப்பசி, சஷ்டி. |
| ௫. முத்துக்குமார சுவாமிகள் | ... | |
| ௬. சிதம்பர சுவாமிகள் | ... | ஆடி, திருவோணம். |
| எ. சிவசங்கர சுவாமிகள் | ... | ஐப்பசி, சதயம். |
| அ. முருகேச சுவாமிகள் | ... | வைகாசி, மிருகசீரிடம். |
| ௯. முத்துக்குமார சுவாமிகள் | ... | |
| க0. சிவசங்கர சுவாமிகள் | ... | பங்குனி, பூரம். |
| கக. சிவப்பிரகாச சுவாமிகள் | ... | கார்த்திகை, உத்திரட்டாதி. |

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை சென்னை.